12th September 1958] [Sri M. Kalyanasundaram]

அவர்களை அழைத்த போதிலும், சமரசம் பேசுவதற்கு அந்த முதலாளிகள் உட்படுவதில்லை. 5–ம் தேதிக்கு முன் உற்பத்தி செய்த பீடிகளை அப்புறப்படுத்த போலீஸ் அவர்களுக்கு உதவி புரிவதின் காரணம் என்ன? அவர்களுக்கு என் போலீஸ் உதவுகிறது, அப்பீடிகளை அப்புறப்படுத்துவதற்கு. சமரசம் பேச முதலாளிகள் வர மாட்டேன் என்கிறார்கள், ஆனால் ஏற்கனவே உற்பத்தி செய்த பீடிகளை கிடங்குகளிலிருந்து அப்புறப்படுத்த எதற்காக போலீஸ் உதவி அனுப்பப்படுகிறது என்பதை என்னால் புரிந்து கொள்ளமுடியவில்லை. ஹிந்து பத்திரிகைத் தொழிலாளர்கள் போராட்டம் நடந்தபோது. அமைதியான முறையில் தொழிலாளர்கள் போராட்டம் நடத்தும்போது முதலாளிகளுக்கு போலீஸ் பாதுகாப்பு கொடுக்கப்படமாட்டாது என்று அமைச்சரவர்கள் அறிவித்தார்கள். அப்படி அதில் போலீஸ் தலையிடாமல் இருந்ததினால்தான் அப்போராட்டம் வெற்றிபெற்றது. ஆனால் திருச்சியில் நிலை வேறாக இருக்கிறது. அதற்கு காரணம் என்ன ? தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட மட்டில், இப்பிரச்னையை சமரசமாக தீர்க்க வேண்டுமென்ற ஆவல் அவர்களுக்கு இருக்கிறது. ஆனால் முதலாளிகள் சமரசத்திற்கு இணங்க மறுக்கிறார்கள். ஆகவே, சர்க்கார் இது சம்பந்தமாக் என்ன நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்திருக்கிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the workers employed in 21 beedi manufacturing establishments in Tiruchirappalli demanded that the managements should increase the wage of Rs. 1–8–0 for rolling 1,000 beedies to Rs. 2–4–0 for 1,000 jadi beedies and Rs. 2 for 1,000 sada beedies and that the wages for pasting rings on 1,000 beedies should be fixed at three annas and the workers supplied with yarn, paste, etc. The workers who are members of the Tiruchirappalli District United Beedi Labour Union staged a token strike on 3rd August 1958 on this issue. According to the newspaper report, 20,000 workers have gone on strike from 5th September 1958.

The Labour Officer, Tiruchirappalli, met the representatives of the workers and the managements on 31st July 1958 and 25th August 1958, held conciliation proceedings in the matter and has submitted his report. The report with the remarks of the Commissioner of Labour has just been received and is under the consideration of the Government.

## V.—GOVERNMENT BILL.

### THE MADRAS BEEDI INDUSTRIAL PDEMISES (REGULATION OF CONDITIONS OF WORK) BILL, 1958 (L.A. BILL NO. 18 OF 1958).

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, amendments to the Bill were to be given day before yesterday but the Government amendments are even now coming in. In view of the fact that we are going to have clause-by-clause consideration of the Bill only tomorrow, I request that the time for giving amendments may be extended up to this evening.

MR. SPEAKER : I am glad the hon. Member has raised this point. The Government have got a right to bring in amendments even at the last minute, even when the clauses are under consideration, on the floor of this House. That privilege hon. Members do not have. We have fixed a particular time-limit for the receipt

of amendments from non-official members and that must be stuck to. Therefore, I refuse to extend the time-limit already fixed for the receipt of amendments.

SRI M. KALYANASUNDARAM : Sir, with due respect to the Chair, I must say that it is not that the Government have a right. It is the Hon. Speaker who has got the right to allow any amendment either from the Government or the non-official members at any time. It is not as if the Government have got extra privilege over others.

MR. SPEAKER : The Government have always got a right to bring in amendments at any time, of course, with the permission of the Chair. That has been going on for some time and I want to maintain the *status quo*. So far as non-official members are concerned, we have fixed a time-limit and I am unable to extend it.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I move—

'That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958 (L.A. Bill No. 18 of 1958), as amended by the Joint Select Committee be taken into consideration.'

MR. SPEAKER : Motion moved—

'That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958 (L.A. Bill No. 18 of 1958), as amended by the Joint Select Committee be taken into consideration.'

10-20 a.m. THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கடந்த எப்ரல் மாதத்தில் இந்த பீடி மசோதாவானது பரிசிலனை கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. பரிசிலனை கமிட்டியார் இன்னும் நல்ல விவரங்களை எல்லாம் சேகரிக்க வேண்டும் என்ற காரணத்திற்காக முக்கியமாக பீடி உற்பத்தி செய்கின்ற பல ஊர்களுக்குச் சென்று அங்கு பீடி உற்பத்தி செய்கின்றவர்கள் எல்லோரையும் சந்தித்து அவர்களுடைய சாட்சியத்தை எல்லாம் எடுத்துக்கொண்டார்கள். அதன் பிறகு சென்னையில் கூடி இந்த கமிட்டியானது சில மாறுதல்களை முதலில் கொண்டுவந்த சட்டத்தில் செய்தது. அதில் முக்கியமாகச் செய்த சில மாறுதல்களை மாத்திரம் சொல்ல விரும்புகிறேன். அதாவது பீடித்தொழிற்சாலை நடத்தக்கூடிய சில இடங்களில் அந்த தொழிற்சாலையை நடத்தும் முதலாளி யார் என்பதை தெரிந்துகொள்ள முடியாத நிலையில் இருந்தது. இதைப்பற்றி பல விவகாரங்கள் கோர்ட்டுகளுக்கு சென்று தீர்ப்புகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அதில் எப்போது தொழிலாளிக்கும் முலாளிக்கும் நேரடியான (மாஸ்டர் அண்ட் ஸர்வண்ட்) தொடர்பு இவை என்று கட்டுப்படுத்த முடியாது என்று ஹைகோர்ட்டு தீர்ப்பு கொடுத்திருக்கின்றது. சில இடங்களில் முதலாளிகள் பின்னால் இருந்து கொண்டு சில ஆட்களை முன்னால் வைத்துக்கொண்டு தொழிற்சாலை நடத்தி வருகின்ற சமயத்தில் அதாவது பணம் கொடுக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டால் அதை கொடுக்காமல் தப்பித்துக்கொள்ளுகின்ற நிலைமை ஏற்படுகின்றது. இதை மாற்றுவதற்கு வேண்டி முதலாளி (எம்பளாயர்) யார் என்பதை திட்டப்படுத்துவதற்காக "எம்ப்ளாயர்" என்ற பதத்திற்கு ஒரு புதிய விவரணம் (டெபனிஷன்) கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை இன்னும் மாற்றுவதற்கு சர்க்கார் இன்னொறு திருத்தம் கொடுத்திருக்கிறது. அதை ஷரத்து வாரியாக வரும்போது பரிசீலிக்கலாம்.

12th September 1958] [Sri R. Venkataraman]

அடுத்தப்படியாக லைஸன்ஸ் வழங்குவதில் வருஷா வருஷம் லைஸன்ஸை புதுப்பிக்கவேண்டும் என்றுசொல்லப்பட்டிருக்கிறது. அதோடு அதை எந்த சமயத்திலும் ரத்துசெய்வதற்கும் அதிகாரம் இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் ரத்து செய்யும்போது அதன் மீது அப்பீல் கொடுப்பதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. மேலும் மத்திய சர்க்கார் இந்த சட்டத்தைப் பரிசீலனை செய்து பார்த்தபோது 250 தொழிலாளர்கள் இருக்கக்கூடிய ஒவ்வொரு இடத்திலும் ஒரு சேம நலவிடுதி ஏற்படுத்த வேண்டும் என்று தெரிவிக்கப்பட்டிருந்தது. அதையும் ஏற்று அதற்காக ஒரு தனி ஷரத்து போடப்பட்டிருக்கிறது. இதில் வேலை செய்கின்ற தொழிலாளர்களுக்கு சட்டபூர்வமாகவோ அல்லது நேரடியான ஒப்பந்தம் மூலமாகவோ ஏதாவது அதிகப்படியான சலுகைகள் இருக்குமானால் அவைகள் எல்லாம் பாதுகாக்கப்படும் என்றும் இதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டியது லேபர் கமிஷனர்தான் என்றும் இப்போது மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஷரத்தானது ஷாப் ஆக்ட்—டில் இருப்பதைப் போல் செய்யப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக இந்த சட்டத்திலுள்ள எல்லா ஷரத்துக்களையும் ஒரே சமயத்தில் ராஜ்யம் முழுதும் அமுல் நடத்தப்பட வேண்டுமா என்பதைப்பற்றி ஆலோசித்துப்பார்த்தால் சில ஷரத்துக்களை அவ்வப்போது அமல் செய்தால் போதும் என்றும், சில பகுதிகளில் மாத்திரம் சில ஷரத்துக்களை அமல் செய்தால் போதும் என்றும் திருத்தி மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. ஏன் இவ்விதம் அமைக்கப்பட்டிருக்கிறதென்றால் இந்தத் தொழிலை சாதாரணமாக பழமையான தொழிலாக சில இடங்களில் நடத்தி வந்திருப்பதால் திடீரென்று சில இடங்களில் பாக்டரி சட்டத்தை அமல் நடத்துவது சுலபமாக இராது. ஆகவே அவர்களுடைய பழைய முறைகளை எல்லாம் மாற்றிக்கொள்வதற்கு அவகாசம் கொடுக்க வேண்டும் என்கின்ற முறையில் தான் இவ்விதம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதல்லாமல் சர்க்கார் அதை அமல் நடத்த வேண்டாம் என்று எண்ணுகிறது என்று யாரும் நினைக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். எந்த விதமான மாற்றம் கொண்டுவந்தாலும், அதை நல்ல முறையில் நடத்த வேண்டுமானால் அவர்களுடைய பழைய முறையை மாற்றிக் கொண்டு இந்த சட்டத்தை அமல் நடத்துவதற்கு அவர்களுக்கு வாய்ப்பும் சந்தர்ப்பமும் அளிக்க வேண்டும். வேறு பெரிய மாறுதல்கள் ஒன்று இதில் செய்யப்படவில்லை. ஆகவே இந்த மசோதாவை இந்த சபை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER: We will have general discussion on the Bill to-day and we will take up the clause-by-clause consideration tomorrow. That is the arrangement unless the Hon. Minister has anything to say.

THE HON. SRI R. VENKATARAMAN: இதன் பேரில் பொது விவாதத்திற்கு ஒரு மணி நேரம் அல்லது ஒன்றறை மணி நேரம் ஒதுக்கி விட்டு ஷரத்து வாரியாக வரும்போது இதைப்பற்றி நன்றாக பரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது. ஆதலால் இன்றே ஷரத்து வாரி பரிசீலனை எடுத்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன். அங்கத்தினர்கள் வேறு விதமாக விரும்பினால் அதுமாதிரி நடந்து கொள்வதிலும் எனக்கு ஆட்சேபனை இல்லை.

MR. SPEAKER: இதற்கு அங்கத்தினர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM: சர்க்கார் கொடுத்திருக்கின்ற திருத்தங்கள் இன்றுதான் எங்கள் கைக்கு வந்திருக்கின்றன. அவைகளை எல்லாம் நன்றாகப் பரிசீலிக்க வேண்டியிருக்கிறது .ஆகவே இன்றைக்கு இதன் மீது பொது விவாதம் நடத்தலாம். நாளைய தினம் ஷரத்து வாரியாக விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: அப்படியானால் எனக்கு ஆட்சேபனை ஒன்றுமில்லை.

**Mr. SPEAKER :** பொது விவாதம் ஒன்றரை மணிவரை நடத்துவதற்கு, இதன் பேரில் பேசுவதற்கு, சர்க்கார் கட்சி கொறடா அவர்கள், பெயர்கள் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN :** தலைவர் அவர்களே, நமது ராஜ்யத்தில் ஒரு லட்சம் பீடித் தொழிலாளர்களுக்குமேல் இருக்கிறார்கள். அப்படி ஒரு லட்சம் பேர்களுக்கு மேல் இருக்கின்ற இந்த தொழில் இன்றைக்கு எந்த அளவு பாக்டரிகள் நடத்தப்படுகின்றன, அந்த பாக்டரிகள் நடத்தக்கூடிய முதலாளிகளுக்கு அதிகப்படியாக எவ்வளவு லாபம் கிடைக்கின்றது என்பதைப் பற்றி இந்த நேரத்தில் ஒவ்வொருவரும் தெரிந்து கொள்வது மிக மிக அவசியம் என்பதை எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன். முக்கியமாக பெரும் லாபத்தைக் கொடுக்கக்கூடிய இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு இதுவரை எந்த விதமான சட்டபூர்வமான பாதுகாப்பும் இல்லாமல் இருந்தது. ஆனால், 10, 15 ஆண்டுகளுக்கு முன்னால் இதில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று திரண்டு ஸ்தாபன ரீதியாக அவர்களுடைய பிரச்னைகளை எடுத்துரைத்து புள்ளிவிவரத்துடன் தீர்மானம் போட்டு தெரிவித்த பிறகு தான் பல தொழில் விசாரணை கமிட்டிகள் அமைக்கப்பட்டது. அதில் பிரதானமானது, 1946-ல் அமைக்கப்பட்ட ஒரு கமிட்டியும், 1956-ம் ஆண்டில் அமைக்கப்பட்ட ஒரு கமிட்டியுமாகும். சர்க்காரால் அமைக்கப்பட்ட கமிட்டியின் மூலமாக இதை பரிசீலித்தபின் இந்த தொழிலில் அதிகப்படியான லாபம் கிடைக்கின்றது, நஷ்டம் கிடையாது என்பதையும் எடுத்துக் காட்டப்பட்டது. இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு புகையிலை போன்ற பொருள்களை அடிக்கடி கையாண்டு கொண்டு இருப்பதால், அதில் விஷ சத்துக்கள் (பாய்ஸன்) இருக்கிறது, அதன் மூலமாக இவர்களுக்கு டி. பி. போன்ற நோய்கள் ஏற்படுகின்றன என்றும் ஆகவே இதை தீர்ப்பதற்கு நல்ல முறையில் பாக்டரி நடத்த வேண்டும் என்றும், அவர்களுக்கு சுகாதார வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று எல்லாம் அந்த கமிட்டி சொல்லியிருக்கிறது. அது மட்டுமல்ல, இப்படியெல்லாம், அவர்களிடம் எடுத்துச் சொல்லி ஒவ்வொரு தொழிற்சாலையையும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நடத்த வேண்டுமென்று 1948-ல் பாக்டரி சட்டம் கொண்டுவந்திருந்தபோதிலும்கூட, அந்த பாக்டரி சட்டத்தின் அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் பாக்டரி அமைத்து அதில் வேலைசெய்யக்கூடிய அளவுக்கும் கூட நிலைமை இல்லாமல் இருந்தது. இவ்விதம் 70 வருஷங்களுக்கு மேலாக இந்த தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு இல்லாமல் இந்த பாக்டரி சட்டம் வந்தவுடன் பாக்டரிகளை எல்லாம் உடைத்து எறிந்து விட்டு பிராஞ்சுகளாக அமைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டது. அவர்கள் பின்னால் ஷாப் ஆக்ட்டின் சட்டப்படி உரிமைகள் வேண்டும் என்று கேட்ட நேரத்தில் இவைகள் எல்லாம் "வீட்டு வேலை" என்கிற முறையில் தொழிலாளர்களுடைய கோரிக்கைகள் எல்லாம் கவனிக்கப்படாமல் இருந்து வந்தது. அதன் பின்னால் 1956-ல் அமைக்கப்பட்ட கமிட்டியில் பொருளாதார நிபுணராக இருந்த திரு எம். எ. நடராஜன் அவர்கள் ரிப்போர்ட்டில் என்ன சொல்லியிருக்கிறார் என்றால், இந்த தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு ஓரளவேனும் சலுகை அளிக்கவேண்டும் என்று சொன்ன நேரத்தில் பீடி பாக்டரி முதலாளிகள் எல்லாம் பீடி பாக்டரிகளை எல்லாம் உடைத்தெறிந்துவிட்டு பிராஞ்சுகளாக அமைத்துக்கொண்டு, வீட்டு வேலை (அவுட்டோர் ஸிஸ்டம்) என்கிற முறையில் அமைத்துக்கொண்டு தொழிலாளர்களை சின்னாபின்னப்படுத்தி விட்டார்கள்
10-30 a.m. என்று தெட்டத் தெளிவாக எடுத்துக்கூறியிருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல, 1948-ம் வருஷம் பாக்டரி சட்டத்தின் பிரகாரம் இது வரையில், 100,000 தொழிலாளர்களுக்கு மேல் உள்ள இந்த ராஜ்யத்தில், பாக்டரி லைசென்ஸ் வாங்கிக் கொண்டு நடத்தப்படும் தொழிற்சாலைகள் எவ்வளவு, அந்தத் தொழிற்சாலைகளில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை எவ்வளவு என்று சட்ட சபையில் ஒரு கேள்வியைக் கேட்டதற்கு, சிலர் லைசென்ஸ் வாங்கியிருப்பதாகவும் அந்தத் தொழிற்சாலைகளில் 2,000 தொழிலாளர்கள் இருப்பதாகவும் பதிலில் குறிப்பிட்டதை எடுத்துப்

12th September 1958] [Sri V. K. Kothandaraman]

பார்த்தால், பாக்டரி ஆக்ட் இருந்தபோதிலும், லைசென்ஸ் இல்லாமல், தொழிலாளர்களை ஏமாற்றுவது மட்டுமல்லாமல், சர்க்காரையும் ஏமாற்றக் கூடிய அளவிற்கு இந்தத் தொழிற்சாலைகள் நடைபெற்று வருகிறது என்பதைப் பார்க்கிறோம். இதை நான் மட்டும் சொல்லவில்லை. விசேஷ அதிகாரி நடராஜன் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இன்றைய தினம் தொழிலாளர்களை சின்னாபின்னப் படுத்தி, அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய சலுகைகளைக் கொடுக்காமல், அவர்களை இன்றைய தினம் ஏமாற்றுவது மட்டுமல்ல, சர்க்காருக்குக் கொடுக்கவேண்டிய பலவிதமான வரிகளைக் கொடுப்பதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கான முயற்சிகளை—சூழ்ச்சிகளை—செய்துகொண்டு வந்திருக்கிறார்கள், செய்துகொண்டு வருகிறார்கள். இதையெல்லாம் நல்ல முறையில் திருத்தி அமைக்கவேண்டுமென்று அவர் அபிப்பிராயங்களைக் கூறியிருக்கிறார். அதுமட்டுமல்ல. இன்றைய தினம் குடிசைத் தொழில் என்ற பெயரிலே, குடிசைத் தொழில் என்று சொல்லி சர்க்காரிடத்தில் பல நன்மைகளைப் பெற்றுத் தொழிலாளர்களுக்குக் கொடுக்கவேண்டிய சலுகைகளைக் கொடுக்காமல், கொடுப்பதிலிருந்து தப்பித்துக்கொள்ள இந்த முதலாளிகள் இது போன்று சட்டத்திற்குப் புறம்பாகப் போகும் அளவுக்கு இன்றைய தினம் நிலைமை இருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்பதைப் பார்த்தால் பாக்டரி ஆக்டிலே இருக்கக்கூடிய கிளாஸ் 2 (ஜி), முதலாளி யார், என்பதற்கான விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த விளக்கத்திலேதான் கோளாறு இருக்கிறது. அந்தக் காரணத்தால்தான் இது வரையில் இந்த படி பாக்டரி முதலாளிகள் பேரிலும் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. பீடி பாக்டரி முதலாளி மீது நடவடிக்கை எடுப்பதற்கு பதிலாக பிரான்ச் மானேஜர் என்ற தொழிலாளி பேரிலோ, மானேஜர் பேரிலோ அல்லது சூபரின்டென்டென்ட் என்பவர் பேரிலோ நடவடிக்கை எடுக்கக் கூடிய நிலைமை வந்திருக்கிறதேயொழிய, அதிகாரிகளும் தற்போதுள்ள கிளாஸிலே உள்ள விளக்கத்தை வைத்துக்கொண்டு முதலாளிகள் பேரில் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். சரியான சட்டம் வரும் வரையில் நாங்கள் தலையிட முடியாத நிலையில் இருக்கிறோம் என்று சொல்கிறார்கள். அந்த விளக்கம் கொடுக்கப்பட்டிருப்பதன் அடிப்படையில்தான் அவர்களும் "நாங்கள் முதலாளிகள் அல்ல" என்று சொல்லி தப்பித்துக்கொள்ளும் அளவிற்கு நிலைமை இருக்கிறது. இதுவரையில் அப்படித்தான் இருந்து வந்திருக்கிறது. ஆகவேதான் இப்போது இந்தச் சட்டத்தைக் கொண்டுவரும் நேரத்தில், இதில்தான் பிரதான கவனம் செலுத்தவேண்டும். தொழிலாளர் என்றால் யார், முதலாளிகள் என்றால் யார், பிராஞ்ச் மானேஜருடைய பொறுப்பு என்ன என்பதைப் பற்றியெல்லாம் நிர்ணயிக்கவேண்டும். லைஸென்ஸ் கேட்டால் யாருக்குக் கொடுக்கவேண்டும் என்பதைப் பற்றி மிகத் தெளிவாக இந்தச் சட்டத்திலே கொண்டு வந்து, தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் எந்த விதமான சச்சரவு இல்லாமல், தகராறு இல்லாமல், அமைதியான சூழ்நிலையில் நடக்க ஏற்பாடு செய்யவேண்டும். இன்றைக்குப் பலவிதமான சட்டங்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. விவசாயிகளுக்கு வேண்டிய நில வெளியேற்றத் தடுப்புச் சட்டம் கொண்டுவரப்பட்டது. நியாயவாரச் சட்டம் கொண்டுவரப்பட்டது. எத்தனையோ சட்டங்களைக் கொண்டு வந்த போதிலும், அவைகளிலுள்ள ஒட்டைகளை வைத்துக்கொண்டு ஹைகோர்ட்டுக்குப் போவது, சுப்ரீம் கோர்ட்டுக்குப் போவது, இப்படி மற்ற கோர்ட்டுகளுக்கும்போய் அந்தச் சட்டத்தை செல்லுபடி செய்யாத அளவிற்கு இன்றைய நிலைமை இருந்து வருகிறது. அதன் காரணமாக குழப்பம் ஏற்படக்கூடிய நிலையை நாம் பார்க்கிறோம். அந்தக் காரணத்தினால், இந்தச் சட்டத்தைக் கொண்டுவரும் நேரத்தில், முதலாளிகள் யார் என்பதை நாம் திட்ட வட்டமாகச் சொல்ல வேண்டுமானால், இன்றைக்கு டிரேட் மார்க் சொந்தக்காரர் என்று யார் இருக்கிறாரோ, டிரேட் மார்க் யார் பேரிலே ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறதோ, அவர்களுக்குத்தான் லைசென்ஸ் கொடுக்கப்படவேண்டும். அப்படிக் கொடுப்பதன் மூலமாகத்தான் உண்மையிலே அந்த முதலாளிகளைக் கட்டுப்படுத்த முடியும். ஒரு காரணம் சொல்லலாம், டிரேட் மார்க் சொந்தகாரருக்குத்தான் லைசென்ஸ் கொடுக்க வேண்டுமென்று சொல்லமுடியாது. மத்திய சர்க்கார்

விதித்திருக்கும் சட்டத்தின் அடிப்படையில் டிரேட் மார்க் சொந்தக்காரராக இல்லாமல் வேறு யாராவது ஒரு தொழிலை நடத்த லைசென்ஸ் கேட்டால் கொடுக்கவேண்டும் என்று விதி இருக்கும் காரணத்தினுல் நாங்கள் ஒன்றும் செய்யமுடியாது, மத்திய சர்க்கார்தான் அந்தச் சட்டத்தைச் திருத்தி அமைக்க வேண்டும், ஆகையால் டிரேட் மார்க் யார் பேரிலே இருக்கிறதோ அவருக்கு மட்டும்தான் கொடுக்க முடியும் என்று சொல்ல முடியாது என்று பதில் சொல்லலாம் என்பது எனக்குத் தெரியும். இருந்தபோதிலும் இன்று மத்திய சர்க்காரிடம் கண்டிப்பாக வற்புறுத்த வேண்டும். பல பிரச்னைகளில் மத்திய சர்க்கார் குறுக்கிடுவதும், பிறகு கேள்வியெழும்போது மத்திய சர்க்காரைக் காட்டித் தப்பித்துக்கொள்வதும், இதன் காரணமாக இந்த ராஜ்ய மக்களுக்கு—இந்த ராஜ்யத் தொழிலாளிகளுக்கு—எந்த விதமான நன்மையையும் செய்ய முடியாத அளவிற்கு மிக மோசமான நிலைமையில் இருக்கிறது. எந்தெந்தப் பிரச்னைகளில் இந்த ராஜ்யத்தில் இருக்கக்கூடிய தொழிலாளிகளுக்கு நாம் சலுகைகளைக் கொடுக்க வேண்டுமென்று எண்ணுகிறோமோ, அந்தச் சலுகைகளை அளிக்கும் அதிகாரம் வேண்டும் என்று மத்திய சர்க்காரிடம் வற்புறுத்தவேண்டும். அப்படி வற்புறுத்தப்பட்டதா என்று சொன்னுல், வற்புறுத்தப்படவில்லை என்றுதான் சொல்லவேண்டும். இப்போது ஒரு பிரச்னை சிறிதாக இருந்தாலும், பெரிதாக இருந்தாலும், பெருமளவிற்குக் கிளர்ச்சி ஏற்பட்டபிறகு, கிளர்ச்சியிலே ஈடுபட்டபிறகுதான், அதைப் பற்றிச் சிந்திக்கும் நிலைமை இருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். ஆகவேதான் இந்த முதலாளிகள் யார் என்பதைப் பற்றி திட்ட வட்டமாகச் சொல்வது மட்டுமல்ல, இன்றைய தினம் பார்க்கிறோம் எல். 2 லைசென்ஸ் என்ற பேரில் சென்டரல் எக்ஸைஸ் டிபார்ட்மெண்ட் மூலமாக யார் கேட்டாலும் கொடுக்கப்படுகிறது. அவர்களுக்குத் திறமை இருக்கிறதா, தகுதி ஏதாவது இருக்கிறதா என்பதைப் பற்றி கவனிப்பது கிடையாது. இந்த மாதிரி ஒவ்வொரு பாக்டரி முதலாளியும் எத்தனை லைசென்ஸ் கேட்டபோதிலும் உடனடியாகக் கொடுக்கக்கூடிய அளவிற்கு இருந்து வருகிறது. அப்படிக் கொடுக்கப்படுவதன் காரணத்தினுல், அந்த லைசென்ஸ்களை வாங்கிக் கொண்டு எந்த இடத்திலே வேண்டுமானுலும் செய்யக்கூடிய அளவிற்கு இருந்து வருவதால், அதற்கான அதிகாரிகள் இருந்த போதிலும், அந்த அதிகாரிகள் கட்டுப்படுத்த முடியாத அளவிற்கு இருக்கிறது. அதிகாரிகள் ஒன்றும் செய்ய முடியாத அளவிற்கு நிலைமை இருக்கிறது. ஆகவேதான் இன்றைக்கு எல். 2 லைசென்ஸ் என்று சொன்னுல், சென்ட்ரல் எக்ஸைஸ் டிபார்ட்மெண்ட் கொடுப்பதாக இருந்தாலும், இந்த ராஜ்ய சர்க்காரின் அதிகாரிகளைக் கலந்துகொண்டு பாக்டரி லைசென்ஸ் யாருக்கு இருக்கிறதோ அவர்களுக்கு மட்டும்தான் எல். 2 லைசென்ஸ் கொடுக்கவேண்டும். அதைத் திருத்தி, மாற்றி அமைத்தாலொழிய, இந்தச் சட்டம் உருப்படியான முறையில், நல்ல முறையில், தொழிலாளர்களுக்குச் சாதகமான முறையில் வருமோ, வராதோ, என்ற முறையில் இருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்கிறேன். நான் சொல்லுவது மட்டுமல்ல, நமது மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்களுக்கும் இது தெள்ளந்தெளிவாகத் தெரியும். அவரும் அதற்குக் கவலை பட்டுக் கொண்டிருக்கிறுர் என்பதும் தெரியும். சமீபத்தில் டில்லிக்குப் போயிருந்தபோது இதைப்பற்றி ஏதாவது கலந்தாலோசித்தார்களா, அவர்களிடம் ஏதாவது கேட்டிருக்கிறுர்களா என்பதனை இந்த சந்தர்ப்பத்திலே சொல்லவேண்டுமென அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஆகவே, இன்றைய தினம் இந்தச் சட்டத்தைக் கொண்டுவரக் கூடிய நேரத்தில், இந்தத் தொழிலை ஒரு குடிசைத் தொழில் என்று சொல்லப்படுகிறது. இதைக் குடிசைத் தொழில் என்று சொல்லி, கட்டிடம் கட்டவேண்டுமென இந்தச் சட்டத்தில் கொண்டுவரக்கூடாது. இந்தச் சட்டத்தில் கண்டுள்ளபடி கட்டிடத்தைக் கட்ட முடியுமா? அதற்கு வேண்டிய கட்டிடத்தை வாடகைக்கு வாங்குவதற்குக் கிடைக்கிறதா? அப்படி வாங்கவேண்டுமானுல்கூட நகரப் புறங்களில் கிடையாது. நகரத்திற்கு அப்பால் எங்காவது இடம் இருக்கலாம். ஆனுல் அங்கே கட்டுவதாக இருந்தாலும் பணம் கிடையாது, என்றெல்லாம் இன்றைய தினம் பலதரப்பட்ட சாக்குப் போக்குகளைச் சொல்லக்கூடிய அளவிற்கு வாதங்கள் வரலாம்.

12th September 1958] [Sri V. K. Kothandaraman]

என்னைப் பொறுத்தவரையில் இன்றைக்கு இது ஒரு குடிசைத் தொழிலாகயில்லை என்று நான் சொல்லுவேன். குடிசைத் தொழில் என்று சொன்னால், அதற்கு என்ன அடிப்படை ஆதாரங்கள் இருக்கவேண்டுமென்பதை நாம் பார்க்கவேண்டும். குடிசைத் தொழில் என்று சொன்னால், ஒரு தொழிலாளியும், அவனது குடும்பத்தாரும் வீட்டில் வைத்துத் தொழில் நடத்தவேண்டும் என்கிற நிலைமை இருக்கவேண்டும். இரண்டாவதாக, குறைந்தபட்ச மூலதனம் போட்டு நடத்தவேண்டும். அதுவும் தொழிலாளியின் சொந்த மூலதானமாக இருக்க வேண்டும். ஆனால் இந்தத் தொழில் அப்படி நடைபெறவில்லை. வேறு ஒரு முதலாளியால் மூலதனம் போடப்பட்டு, மற்றவர்களின் மூலமாக உற்பத்தி செய்யக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதை நாம் பார்த்துக்கொண்டு வருகிறோம். மூன்றுவதாக, இயந்திர சக்தியில்லாமலேயே மூலப் பொருள்களை உபயோகப் படுத்தவேண்டும். நான்காவதாக, பக்கா வருமானம் தரும் தொழிலாகத்தான் குடிசைத் தொழில் இருக்கும். ஐந்தாவதாக, தன்னுடைய உற்பத்திப் பொருள்களின் கிராக்கிக்குத் தகுந்தவாறு, உற்பத்தி அளவையும், தன்மையையும் அவர் பிரியம்போல் மாற்றிக்கொள்ளக் கூடிய அளவுக்கு அவருக்கு அதிகாரம் இருக்கவேண்டும். இந்த அளவுக்கு இன்றைய தினம் நிலைமை இருக்கிறதா என்பதையும் பார்த்தால் உண்மையிலே அதற்கு நேர்மாறாகத்தான் இருக்கிறது என்பதை நாம் உணரமுடியும். ஆகவே, இதைக் குடிசைத் தொழில் என்று சொல்லும் நிலைமையோ, அல்லது சட்டத்திற்குக் கட்டுப்பட்டதல்ல என்று சொல்லும் நிலைமையோ எந்தக் காலத்தில் ஏற்பட்டது என்பதைப் பார்த்தால், 1948–ல் பாக்டரி சட்டம் வந்த பிறகு, 1953–ல் ஷாப் சட்டம் வந்தபிறகு, இதிலேயிருந்து தப்பித்துக்கொள்வதற்காக ஏற்பட்டது. ஏற்கனவே பல லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவுசெய்து கட்டிய கட்டிடங்களை இடித்து, இன்றைக்குப் பலர் பெயரிலே இந்தத் தொழில் நடத்தப்பட்டு வருகிறது. அது மாத்திரம் அல்ல. 10-40 a.m.

இன்னொரு விஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். இந்தப் பீடித் தொழிலை நடத்தும் முதலாளி என்ன செய்கிறார்? இலைப் புகையிலையை வைத்துக்கொண்டு, அதைத் தொழிலாளிக்குக் கொடுத்து, இவரிடமிருந்து அவர் இலையை விலைக்கு வாங்கிக்கொள்வது போலவும், அவரிடமிருந்து பீடியை இவர் விலைக்கு வாங்குவது போலவும் கணக்கிலே எழுதிவிட்டு, “நானும் முதலாளி அல்ல, அவரும் தொழிலாளி அல்ல, நானும் முதலாளி அவரும் முதலாளி” என்று சொல்லும் நிலைமை தான் இருந்து வருகிறது. “நான் இலைப் புகையிலையை வியாபாரம் செய்கிறேன், அவர் பீடியை வியாபாரம் செய்கிறார், அவரிடமிருந்து பீடியை நான் விலைக்கு வாங்குகிறேன், நாங்கள் இருவரும் வியாபாரிகளேயன்றி, தொழிலாளி—முதலாளி என்ற அடிப்படையில் எங்கள் உறவு இல்லை” என்று சொல்லி, இந்தச் சட்டத்திலேயிருந்து தப்பித்துக்கொள்ளும் அளவுக்கு இன்று நிலைமை இருந்து வருகிறது. இந்தக் காரணத்தினால்தான் இந்த ராஜ்யத்திலே இன்று எங்கு பார்த்தாலும், எல்லா விதத் தொழிலாளிகளுக்கும் சலுகைகள் அளிக்கப்பட்டிருந்தபோதிலும்கூட, இந்தப் பீடித் தொழிலாளிகளுக்கு மட்டும் எந்தவிதமான பாதுகாப்பும் இல்லாத நிலையிலே, இன்றைய தினம் சேலம், திருச்சி, வட ஆற்காடு போன்ற ஜில்லாக்களிலும், சென்னையிலும் போராட்டம் நடந்துவருகிறது. இந்த நிமிஷத்திலேகூட சேலத்திலும், திருச்சியிலும் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் அவர்களுக்குக் கிடைக்கவேண்டிய சலுகைகள் கிடைக்கவில்லை. இன்றையதினம் குடிசைத் தொழில் என்று சொல்லித் தப்பித்துக்கொள்வதற்காக, இந்தத் தொழிலிலே பெண் தொழிலாளிகள் ஈடுபட்டிருப்பதினால், அவர்கள் தொழிற்சாலைக்கு வந்து வேலை செய்யமுடியாது. ஆகவே அவர்கள் வீட்டிலே வேலை செய்வதற்கு அனுமதிக்கவேண்டும் என்ற அடிப்படையிலே வற்புறுத்துகிறார்கள். 1948-ல் பாக்டரி சட்டம் வருவதற்கு முன்னால் பெண் தொழிலாளிகள் இல்லாமலிருந்தார்கள். அதற்குப் பிறகு “**out door work**” முறை வந்தபிறகு, இன்றைக்கு வாழ்க்கை நடத்த முடியாமல் மிகவும் மோசமான நிலையில் அவர்கள் இருக்கின்ற காரணத்தினால், பல வீடுகளிலே தாய்மார்களும், பச்சிளங்குழந்தைகளும், இந்தப் புகையிலையை

சிவுவதற்கும், பீடி சுருட்டுவதற்கும் கற்றுக்கொள்ளக்கூடிய அளவுக்கு நிர்ப்பந்தம் ஏற்பட்டதன் காரணமாக இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிருர்கள். ஆகவே, இன்றைக்கு இந்தப் பெண் தொழிலாளிகளுக்காகத் தனியாகத் தொழிற்சாலைகளை ஆரம்பித்து நடத்தவேண்டுமென்கிற ஒரு முறையும் இந்தச் சட்டத்திலே கொண்டுவந்தாகவேண்டுமென்று நான் வற்புறுத்த ஆசைப்படுகிறேன். இதை எதற்காகக் குறிப்பிடுகிறேன் என்று சொன்ஞல், 1948-க்குப் பிறகு பல பெண் தொழிலாளிகள் இந்தத் தொழிலிலே ஈடுபட்டிருக்கிருர்கள். அவர்கள் இதனுல் பாதிக்கப்படக் கூடாது என்ற ஒரே நோக்கத்தோடு இதைச் சொல்லுகிறேன். பெண் தொழிலாளிகள் ஆண்களோடு வேலை செய்ய மாட்டார்கள், அவர்களிலே ஆயிரக்கணக்கானவர்கள் முஸ்லீம் பெண்கள், அதாவது "கோஷா பெண்கள்", ஆண்களோடு சேர்ந்து வேலை செய்யும் அளவுக்கு அவர்கள் வர வில்லை என்ற வாதங்கள் கிளப்பப்படலாம். தனியாக இந்தப் பெண்ளுக்காகத் தொழிற்சாலைகளை வைத்து நடத்தவேண்டும் என்ற ஷரத்தை நாம் இந்தச் சட்டத்திலே கொண்டுவந்தாகவேண்டும் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அதிலும், குறிப்பாக, இன்றையதினம் இந்தச் சட்டம் வருவதன் மூல மாக நாங்கள் இந்தத் தொழிலை மூடவேண்டிய நிலைமை ஏற்படும் என்று சொல்லுகிருர்கள். பம்பாயைப் பாருங்கள், உத்திரப் பிரதேசத்தைப் பாருங்கள், லட்சக்கணக்கானவர்கள் வேலையை இழக்கும் அளவுக்குத் தொழிற்சாலையை மூடிவிட்டார்கள் என்றெல்லாம் சொல்லுகிருர்கள். இங்கே இருக்கக்கூடியவர்கள் தொழிற்சாலையை மூடும் அளவுக்குப் இந்தத் தொழில் லாபமில்லாமல் போய்விடவில்லை. இந்தச் சட்டம் வருவதன் காரணமாக தொழிலை உடனே மூடி விடுவார்கள், தொழிலாளர்கள் வேலையில்லாமல் போய்விடுவார்கள் என்ற பீதிக்கு இடம் கிடையாது. இந்தப் 10 அல்லது 20 வருட காலத்திலே, எனக்குத் தெரிந்து பீடி சுற்றிக்கொண்டிருந்தவர்கள் எல்லாம் இன்றைய தினம் 20 லட்சம், 30 லட்சம், 40 லட்சம் போன்ற ஒரு மூல தனத்திற்கு அதிபதிகளாயிருந்து, பெரிய தொழிற்சாலைகளை நடத்திவருகிருர்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். இதற்கு ஜில்லா வாரியாக வேண்டுமாஞலும் உதாரணங்கள் கொடுக்கலாம். வேறு எந்தத் தொழிலிலே நஷ்டம் ஏற்பட்டிருந்தபோதிலும், இந்த பீடித் தொழிலிலே எந்த விதமான நஷ்டமும் கிடையாது. குறைந்தபட்சம் 1,000 பீடிக்கு ஒரு ரூபாய் முதல் $1\frac{1}{2}$ ரூபாய் வரையிலே இன்றைக்கு லாபம் இருக்கிறது என்பதை நாம் பார்க்க முடியும். இன்றைக்கு 1959-வது வருடத்திய மாடல் கார் வேண்டுமாஞல், முதலிலே அதற்கு டிபாசிட் கட்டுகிறவர் யார் என்ருல் பீடி பாக்டரி முதலாளிதான். அதற்கு அடுத்து மோட்டார் டிரான்ஸ்போர்ட் முதலாளி. அதற்குப் பிறகுதான் மற்ற முதலாளிகள். (சிரிப்பு.) இன்று மற்ற ஜில்லாக்களிலே கூலி எப்படிக் கொடுக்கப்படுகிறது, திருநெல்வேலி ஜில்லாவிலே கூலி எப்படி இருக்கிறது என்று பார்த்தால், அங்கே நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. கோயம்புத்தூரிலே 1,000 பீடிக்கு 2 ரூபாய் கூலி கொடுக்கிருர்கள். சேலத்தில் $1\frac{3}{4}$ ரூபாயிலிருந்து 2 ரூபாய் வரையிலிருக்கிறது. ஆனுல் திருநெல்வேலி ஜில்லாவில் குறைந்தபட்சமாக 7 அல்லது $7\frac{1}{2}$ அணுவாக இருக்கிறது. ஆனுல் அங்கேயுள்ளவர்கள் 15 அணு கொடுக்கிறேம், ஒரு ரூபாய் கொடுக்கிறேம் என்று சொல்லலாம்.

(Sri V. Subbiah in the Chair.)

இன்று முதலாளிகள் ஏராளமான லாபம் சம்பாதிக்கக்கூடிய நிலைமையைத்தான் பார்க்கிறேம். பீடி பாக்டரி முதலாளிகள் தொழிலாளிகளுக்குக் கூலி உயர்வு கொடுப்பதற்குப் பதிலாக, கூலி உயர்வு ஓரளவு இருந்தாலும் அதை நடைமுறையில் கொண்டுவருவதற்கு முதலாளிகளைக் கட்டுப் படுத்துவதற்குச் சட்டம் இல்லாத காரணத்தினுல், லாபம் சம்பாதிக்கக் கூடிய தொழிலாளர்களின் பேரில் கருணை இல்லாமல், விளம்பரத்திற்காக வேண்டி பல கார்கள், ஜீப்கள், வான்கள், இவைகளை வாங்கி வைத்திருக்கிருர்கள். விளம்பரத்திற்காக வேண்டி யானையை வைத்திருக்கிருர்கள். யானைக்கு அல்வாத் துண்டாக வைத்துத் திணிக்கிருர்கள். அது ரொம்பவும்

12th September 1958] [Sri V. K. Kothandaraman]

களைத்துவிடுமோ என்பதற்காகவேண்டி, அதைக் கட்டும் இடத்தில் நன்றாகக் காற்றோட்டமாக இருப்பதற்காக "**Fan**" போட்டிருக்கிறார்கள். இன்றைக்குத் தொழிலாளிகள் வசிப்பதற்கு வீடுகள் இல்லையென்று சொன்னாலும், யானை கட்டுவதற்கு வசதியான கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. தொழிலாளிகளுக்குக் காலுக்குச் செருப்பு இல்லை என்று சொன்னாலும், யானைக்குக் காலுக்கு அழகான செருப்பு, பூட்டுகள் இவைகளைத் தைத்துக் கொடுத்திருக்கிறார்கள். அல்வாத்துண்டு கொடுப்பது போதாது என்று, கூடை கூடையாக பழ தினுசுகள் கொடுக்கக்கூடிய அளவுக்கு நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. நான் ஏதோ வேடிக்கையாகச் சொல்லுகிறேன் என்று நினைக்க வேண்டாம். திருநெல்வேலி ஜில்லாவில் முக்கூடலில் போய்ப் பார்த்தால், நீங்களே இதைப் புரிந்துகொள்ள முடியும். இதை நான் என் சொல்லுகிறேன் என்றால், தொழிற்சாலை நடத்தக்கூடிய முதலாளிகள் கொள்ளை லாபம் அடிக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகத்தான். அதைக் கட்டுப்படுத்தக்கூடிய அளவிற்குச் சட்டம் வராத காரணத்தினால், தொழிலாளிகளின் வாழ்க்கைத் தரம் உயராமல், முதலாளிகள் கொள்ளை லாபம் சம்பாதிக்கக்கூடிய அளவிற்கு நிலைமை மோசமாக இருக்கிறது. "முதலாளி" என்பது யார் என்பதில் தான் இந்தச் சட்டமே இருக்கிறது. ஆகவே "முதலாளி" என்பதற்கான அர்த்தத்தை, "டெபினிஷனை" சரியான முறையிலே வரையறுக்கவேண்டும். அதே போல் "டிரேட் மார்க்" யார் பேரிலே இருக்கிறதோ, அவர்களுக்கு மட்டும் தான் லைசென்ஸ் கொடுக்கக்கூடிய அளவிற்கு இந்தச் சட்டம் கொண்டுவரப்படவேண்டும். அப்பொழுது தான் சட்டம் நல்ல முறையிலே அமுல் செய்யப்படும். இல்லையென்று சொன்னால், இந்தச் சட்டத்தை ஹைகோர்ட்டுக்கும், சுப்ரீம் கோர்ட்டுக்கும் எடுத்துக்கொண்டுபோய் உடைத்துத் தகர்த்தெறிந்துவிட்டு, தொழிலாளிகளைப் பணியவைத்துவிடுவார்கள், சர்க்காரும் தோல்வி அடையக்கூடிய நிலைமை ஏற்படும் என்பதை தெரிவித்துக்கொண்டு, இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI T. T. DANIEL: Mr. Chairman, Sir, I wholeheartedly welcome this Bill. I would say that Madras is the pioneer State in bringing into force such a noble measure. No other State in our country has brought forward any Bill which has such scope and characteristics as are peculiar to this legislation. In this respect, credit has to be given to the Government of Madras and more to the Hon. Minister concerned. The provisions laid down in clauses 9 to 16 of this Bill clearly state the conditions which the licensing authority should be satisfied with before issuing a licence for the beedi industrial premises. It lays down that there should be good ventilation, there should not be any overcrowding, and there should be facilities for good drinking water. It also lays down that in every beedi industrial premises, there should be sufficient latrine and urinal facilities. It is also stated in the Bill that where blending and sieving of tobacco or warming of beedis in hot ovens is carried on, the employer shall provide washing facilities for the use of the employees. In every beedi industrial premises where more than fifty female employees are ordinarily employed, there should be accommodation for keeping conveniently the children of the female workers. These rooms should be under the supervision of lady employees. There is also adequate provision for giving first-aid to the beedi workers who are working in the industrial premises. These are some of the glorious features of the Bill. I will point out to the Government that after introducing this Bill, the manufacturers who are engaged in this trade will have to invest a

larger amount for carrying on their beedi business. A large quantity of the beedi that is produced in our State is transported to Andhra and Mysore where no such similar enactment is in force. I think, after the introduction of this legislation, there will naturally be a corresponding increase in the production of beedi, and there would be unhealthy competition between the beedi industry of this State and the beedi industry of other States where there is no such enactment. I, therefore, suggest to the Government that active steps must be immediately taken to apprise the Central Government of this situation and also the necessity to improve the living conditions of these beedi workers. At the same time all other States in our country should be required to bring in similar legislation in their respective States.

Clause 30 relates to special provisions. It lays down that the female workers may be permitted to carry on the work of wetting or cutting of wrapping leaves outside the beedi industrial premises. This is a noble measure. The object of inserting this provision seems to be that if female workers are compelled to work in the industrial premises, there may be certain sentiments in the minds of the female workers which may prevent a good number of them from doing this work. Just to avoid this contingency this provision has been inserted. But I would like to point out to the Government that pasting the rings and also pasting the labels done by the female employees can also be done outside the beedi premises.

Coming to clause 22, which provides that the employer should be given seven national and festival holidays, I may say that we are going to introduce the National Festival and Holidays Bill. I am afraid that the provisions laid down in clause 22 will come into conflict with the provisions laid down in the National Festival and Holidays Bill. According to the provisions of the National Festival and Holidays Bill, the Independence Day and the Republic Day are compulsory holidays. In respect of the four out of the five remaining holidays, discretion is given to the Inspector to name which of the days should be considered as festival holidays in consultation with the employer and the employees. So far as 1st May is concerned, there is no discretion given to the Inspector. On the other hand, if the majority of the employers desire that 1st May should be considered as a festival holiday, it shall be considered as a festival holiday. Now complete discretion is given to the Inspector to declare which should be the festival holidays. Either the provisions in clause 22 relating to the festival holidays in this Bill should be omitted or it should be modified like the provisions mentioned in the National Festival Holidays Act. Otherwise there would be conflict between the provisions in this Bill and the provisions which are specifically set out in the National Festival and Holidays Bill. Trouble and dispute between the management and the employees will arise on that ground.

Regarding the issue of licence, I would like to bring to the notice of the Hon. Minister that as the provision now stands, the licence has to be given only to the person who uses the industrial

12th September 1958] [Sri T. T. Daniel]

premises. It should be made clear that the employer should also come into the picture so that for any violation of running this business in the industrial premises both the employer and any other person who has got an interest in the premises will become liable.

Sir, it should not be made to appear that the employer need not take the licence, and the authorities can only proceed against the licensee and not the employer as such. Both the employer and the licensee under all circumstances, should be made liable for any of the violations of the provisions of this Bill. This should be made very clear and there should be no room for any ambiguity. Sir, I am glad that so far as the definition of the terms 'employer' and 'employee' is concerned, they have been correctly worded. 11 a.m. So, there can be no misapprehension regarding the definition of these terms. Especially, the word 'employer' has been very correctly defined so as to bring even a person who is advancing money for carrying on the business, or supplying the goods or otherwise who is having a substantial interest in the running of this business.

While supporting this Bill, I like to point out or rather I request the Hon. Minister to consider the case of palmyrah fibre workers also who stand on more or less the same footing as the beedi workers in our State. I hope their case also will be sympathetically considered by the Hon. Minister for Labour and he will bring forward a similar measure to ameliorate their condition also.

SRI P. S. CHINNADURAI: மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, இந்தச் சபை முன்பு சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற மசோதாவை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். இந்த மசோதாவைச் சபை முன் வைத்த கனம் அமைச்சர் அவர்களையும் பாராட்டுகிறேன். இந்த மசோதாவை இதன் எல்லா ஷரத்துக்களுடன், உடனடியாக ராஜ்யத்தில் எல்லா ஜில்லாக்களிலும் அமல் நடத்துவதற்குப் பதிலாக, வேறு வேறு பாகங்களில் வேறுவேறு சமயங்களில் அரசாங்க உசிதம்போல் அமல் நடத்துவது என்று, இப்பொழுது, புதிதாக ஒரு ஷரத்து சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. அந்த ஷரா அவசியந்தானா என்பதை அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டுமென்று, மறுபடியும் எடுத்துக்கூற விரும்புகிறேன். இந்த ஷரா மசோதாவின் நோக்கத்தையே புறக்கணிப்பதாக அமைந்து விடுமோ என்று அஞ்சுகிறேன். இந்த மசோதா சட்டமானால், சுமார் 90 லட்சம் தொழிலாளிகளுக்கு, பல முறைகளிலும், நன்மைகள் ஏற்படும் என்பதால், பொதுவாக தொழிலாளர்களோடு தொழிற் சங்க நிர்வாகிகள் இதை ஆவலோடு எதிர்பார்த்து நிற்கிறார்கள். பீடித் தொழிலில், வேலை நிலைமைகளைக் கட்டுப்படுத்தவேண்டும் என்று, அதன் அவசியத்தை, தொழிலாளிகளும் சரி, அல்லாத தொழிலாளிகளோடு ஏதோ வகையில் சம்பந்தப்பட்ட தொழிற்சங்க ஊழியர்களோ, வேறு பொது நல ஊழியர்களோ நிச்சயமாக அறிவார்கள். பீடித் தொழில் சாதாரணத் தொழில் போன்றதன்று. அந்தத் தொழிலாளிகள், பல வகைகளிலும், பீடி முதலாளிகளால் அலக்கழிக்கப்படுகிறார்கள். முதலாளிகள் தங்கள் சாமர்த்தியத்தை எல்லாம் தொழிலாளிகளை அல்லல் படுத்துவதில் உபயோகித்து வந்திருக்கிறார்கள். நியாயமான பலவிதமான சட்டங்கள் இருந்தாலும், அவர்களெல்லாம், இவைகளிலிருந்து எப்படித் தப்புவது என்பதற்கு வேண்டியுக்தியைக் கண்ணும் கருத்துமாகக் கையாள்வதில் ஈடுபட்டிருப்பதைக் காண்கிறோம். இதற்கு முன்பே பல அங்கத்தினர்கள் இவைகளையெல்லாம் பற்றிக் கூறியிருப்பதால் அதை மீண்டும், மீண்டும் விவரமாகக் கூறிக்கொண்டிருக்கவேண்டாம் என்று நினைக்கிறேன். இவையெல்லாம் அங்கத்தினர்களுக்கும், கனம் அமைச்சர் அவர்களுக்கும் நன்கு

தெரியும். ஆகவே அந்த அல்லல்களிலிருந்து தொழிலாளிகளைக் காப்பாற்ற வேண்டியே இந்த மசோதா வந்திருக்கிறது. ஆனால் அதன் நோக்கம், இந்த ஒன்றாவது ஷரத்து புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கும் காரணத்தால் தடை பட்டுவிடுமோ என்று நினைக்கிறேன். சில ஆண்டுகளுக்கு முன் குதிரைப் பந்தயத்தை ஒழிக்க ஒரு சட்டத்தை நிறைவேற்றினோம். நிறைவேற்றிப் பல ஆண்டுகள் ஆகியும், அந்தச் சட்டம் அமலாக்கப்படவில்லை என்பது அங்கத்தினர்களுக்குத் தெரியும். இந்தச் சபையில் அந்தச் சட்டத்தை ரத்து செய்யாமலும், ஏதோ ஒரு காரணம்பற்றி அதனை ஒரு பக்கத்திலே, அமலாக்காமலும், ரத்து செய்யாமலும், அப்படியே வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அமைச்சர் அவர்கள் ஞாபகத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அப்படி இருக்கையில், இந்தச் சட்டம் இந்த ஷரத்துடன் நிறைவேற்றப்படுமானால், இந்தச் சட்டத்தின் கதியும், குதிரைப் பந்தய சட்டத்தினதைப்போலவே ஆகிவிடுமோ என்ற ஐயம் மிகுதியும் ஏற்படுகிறது. ஏனென்றால், கனம் அமைச்சர் அவர்கள் தொழிலாளிகளிடம் அதிக அனுதாபம் காட்டுகிறார்கள் என்ற குற்றச்சாட்டை அக்கரையுள்ள சில நபர்கள் கிளப்புகிறார்கள். கனம் அமைச்சர் தொழிலாளர் இயக்கத்தில் நீண்ட காலம் இருந்து உழைத்தவர்கள். ஆகவே அவர்களுக்குத் தொழிலாளிகள் பிரச்னைகளில் அக்கரை இருப்பது சகஜமே, பொருத்தமே. இந்தக் குற்றச் சாட்டிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளவேண்டுமென்று, இவர்கள் பல்லிலே படக்கூடாது என்று தொழில் இலாகா வேலையே வேண்டாம் என்று விட்டுவிட்டால், அதற்கப்புறம் வரும் மந்திரி இந்தச் சட்டத்தையும் குதிரைப் பந்தயச் சட்டமாக ஆக்கிவிடுவார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது. நான் ஏன் அப்படிக் குறிப்பிடுகிறேன் என்றால்........(குறுக்கீடு) கனம் அண்ணா அவர்கள் சொல்கிறார்கள், "அவர்கள் நாலு மாதத்தில் இதை விட்டு விட்டுப் போய்விடுவார்கள்" என்று. அப்படி துரதிர்ஷ்ட வசமாக நேர்ந்தால், இந்த மசோதாவில் இந்த ஷரத்து இருக்கும் வரை, குதிரைப் பந்தயச் சட்டத்திற்கு நேர்ந்த கதிதான் நேரும் என்று நிச்சயமாகச் சொல்லுவேன்.

வேலை நிலைமை சம்பந்தமான இந்த மசோதா மட்டும் நிறைவேற்றப்பட்டாலும், அமலாக்கப்பட்டாலும் போதாது. அவர்கள் எதிர் பார்க்கும் சம்பள நிர்ணயச் சட்டமும் வரவேண்டும். ஆகவே, இருக்கும் நிலையில், இந்த ஷரத்து இருந்தால், உண்மையிலேயே, அங்கத்தினர்கள், அமைச்சர் அவர்கள் நோக்கம் நிறைவேறாது என்று மீண்டும் சொல்லிக்கொண்டு, அந்த வார்த்தைகளை, இந்த ஒன்றாவது ஷரத்திலிருந்து நீக்க முன்வர வேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகிறேன். தொழிலாளிகளின், நலனை உத்தேசித்து இந்த வேண்டுகோளை விடுக்க விரும்புகிறேன்.

இந்த மசோதாமாத்திரம் நிறைவேறுவது, பொதுக் கிணறு தோண்டுவது போல்தான் ஆகும். அவர்கள் சம்பள மசோதாவும் நிறைவேற வேண்டும். அது விஷயமாக ஒரு கமிட்டி போட்டு இருப்பதாகத் தெரிகிறது. கமிட்டியின் வேலைகளைத் துரிதப்படுத்தி, அவர்கள் சிபாரிசின் பேரில், உடனடியாக மசோதா கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: அதற்கு மசோதா தேவையில்லை. மினிமம் வேஜஸ் ஆக்ட் அவர்களுக்கும் அனுசரிக்கப்படவேண்டும் என்று ஆகிவிட்டால், அப்படிச் செய்தவுடன் அது அமலாக்கப்பட்டுவிடும்.

SRI P. S. CHINNADURAI: எப்படியிருந்தபோதிலும், சம்பளம் சம்பந்தப்பட்ட வரையில், நிச்சயமான முடிவு ஏற்படுத்தவேண்டும். இதை ஏன் வற்புறுத்துகிறேன் என்றால், சில இடங்களில் சம்பளம் குறைவாகவும், சில இடங்களில் சரியாகவும் இருக்கிறது. கனம் கோதண்டராமன் அவர்கள் சுட்டிக் காட்டிய பிரகாரம், திருநெல்வேலி, கோவை போன்ற பகுதிகளில் சம்பளம் குறைவாக இருக்கிறது. நியாயமான கூலி எல்லோருக்கும் கிடைக்கச் செய்யவேண்டும் என்பது எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்தச் சம்பள நிர்ணய சம்பந்தமான நடவடிக்கைகள் வெகு விரைவில் நிறைவேற்றவேண்டும் என்று கனம் அமைச்சர்

12th September 1958] [Sri P. S. Chinnadurai]

அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். மசோதா தேவையில்லை என்றாலும், அரசாங்க அறிக்கை மூலமாவது செய்யமுடியும் என்றால், அறிக்கையைச் சீக்கிரத்திலே பிறப்பித்து, ஆவன செய்யவேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன். 11-10 a.m.

அதோடு இந்த மசோதாவை நிறைவேற்றுவதனால் இன்றைய தினம் இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்கள், அதாவது வீடுகளில் இலைகளை வெட்டி நனைத்து பீடிகளைச் சுற்றிக்கொண்டிருக்கும் பெண்களின் கதி என்ன ஆகும் என்பதைப்பற்றி நாம் கொஞ்சம் கவனிக்கவேண்டும். ஒரு இடத்திற்கு வந்து அவர்கள் வேலை செய்யாது அவர்கள் இருக்கும் இடத்திலேயே வேலை செய்ய அனுமதிக்கப்படும் என்பதைப்பற்றி 30-வது ஷரத்தில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அதில் "ஸ்பெஷல் ப்ரொவிஷன்" என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. பெண்களுக்குச் சில வசதிகள், அதாவது அவர்கள் தாங்கள் இருக்கும் இடங்களிலேயே இலைகளை வெட்டி நனைத்து, பீடிகளாகச் சுருட்டுவதற்கு வேண்டிய வசதிகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. வீட்டிலேயே இருந்து பீடியை சுற்றுவதற்குப் பெண்களுக்கு இப்படிப்பட்ட வசதியைக் கொடுப்பதற்கு அவசியம் இருக்கிறதா என்பதை மீண்டும் புனராலோசனை செய்து கொள்ள வேண்டும் என்பதை கனம் மந்திரி அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பெண்கள் அவர்கள் வீட்டிலேயே இருந்தாலும் அதையும் அவர்களுடைய தொழில் செய்யக்கூடிய இடம் என்று கருதிக்கொண்டு வீட்டிலேயே பீடி சுருட்டுவதற்கு இந்த மசோதா அனுமதிக்க வேண்டும். இந்த ஷரத்தில் அப்படிப் பெண்கள் வீட்டிலிருந்து கொண்டே இலைகளை வெட்டி நனைத்து பீடி சுற்ற வேண்டுமென்றால் அதை முதலாளி பெண்களுடைய கோரிக்கையின்பேரில் அனுமதிக்கலாம் என்று ஷரத்தில் கண்டிருக்கிறது. அப்படிப்பட்ட தொழிலாளர்களின் ஜாப்தா ஒன்றை முதலாளிகள் வைத்துக்கொள்ள வேண்டும் என்றும் கண்டிருக்கிறது. வேலை செய்கிறவர்கள் எங்கே இருந்தாலும் வேறு இடங்களில் இருந்தாலும் வேறு ஊர்களில் இருந்தாலும் அவர்கள் வேலை செய்யும் இடம் ஒரு தொழில் நிலையம் என்று கருதப்படவேண்டும். இல்லாவிட்டால் முதலாளிகள் அவர்களுடைய பெயர்களை ஜாப்தாவில் காண்பிக்கமாட்டார்கள். வேறு இடங்களிலோ அல்லது வேறு கட்டடங்களிலோ அவர்கள் வேலை செய்தாலும் அந்தப் பிரதேசங்களைத் தொழில் செய்கிற பிரதேசம் என்று பிரகடனப்படுத்த வேண்டும். அப்படி இருந்தால் தான் அவர்களுடைய பெயரையும் அட்டவணையில் சேர்த்துக்கொண்டு வேலை செய்வதற்கு முடியும் என்று நினைக்கிறேன். குறைந்த பட்சம் இந்த விதியைப் பெண்கள் விஷயத்தில் ஈடுபடுத்தவேண்டாம். அப்படிச் செய்தால் அநேகம் முதலாளிகள் பெண்களை வேலைக்கே வைத்துக்கொள்ளமாட்டார்கள். பெண்களே வேலைக்கு வேண்டாம் என்று சொல்வதற்கு இது ஒரு முக்கியமான காரணமாக இருக்கலாம். பஞ்சாலைகளில் கூட இப்பொழுது பெண்களை வேலைக்கு எடுத்துக்கொள்வதாக இல்லை. ஏனென்றால் பெண்களை வேலைக்கு எடுத்துக்கொண்டால் அவர்களுக்குப் பிரசவத்திற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுக்கவேண்டியதாக இருக்கும் என்ற காரணத்தால் அவர்களை எடுத்துக்கொள்வதில்லை. ஆகவே இந்த மசோதாவின் 30-வது ஷரத்தைப் பார்த்தால் முதலாளிகள் பெண்களை வேலைக்கு எடுத்துக்கொள்ள முன் வரமாட்டார்கள் என்று தோன்றுகிறது. ஆகவே அவர்கள் எங்கே வேலை செய்தாலும் அந்தப் பிரதேசத்தைத் தொழில் நடத்தும் பிரதேசம் என்று பிரகடனப்படுத்த வேண்டியது அவசியமாக இருக்கிறது.

ஆனால் பெண்களுக்கு வசதிகளைச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த வசதிகளைச் செய்திருக்கிறார்கள். இந்த ஷரத்தை மனதில் வைத்துக்கொண்டு முதலாளிகள் தங்களுக்குப் பெண்கள் வேலை செய்ய வேண்டியது இல்லை என்று சொல்லுகிற மாத்திரத்தில் இருப்பார்கள். அப்படிச் சொல்வதற்கு இந்த ஷரத்தையும் உபயோகப்படுத்திக்கொள்ள முன் வருவார்கள். இந்த ஷரத்தின்படி தங்கள் கீழ் வேலை செய்கின்ற பெண்கள் யார் யார் என்ற ஜாப்தாவைக் கொடுக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் முதலாளிகள் அப்படிப்பட்ட ஜாப்தாவைக் கொடுக்க முன் வரமாட்டார்கள். வீடுகளில் பெண்களை நியமித்து அவர்க

ளிடம் இலைகளை வெட்டி நனைக்கும் வேலையையும் பீடிகளைச் சுற்றும் வேலைகளையும் கொடுக்காமல் தொழிலாளர்களையே நியமித்துக்கொள்ளுவார்கள். அவர்களுடைய வேலையைத் தொழிலாளர்களிடத்தில் கொடுத்து பத்து மணி நேரத்தில் ஆயிரம் பீடிகளைச் சுருட்டும் வேலையை எட்டு மணி நேரத்தில் வாங்கிக்கொண்டுவிடுவார்கள். அதன் மூலம் குறைந்த கூலி கொடுக்க முயற்சி எடுத்துக்கொள்ளுவார்கள். ஆகவே பெண்களுக்கு உதவியான இந்த முறையில் இன்னும் கொஞ்சம் அதிகமான வசதி செய்து கொடுக்க வேண்டும். அப்படிச் செய்து கொடுப்பதற்கும் முடியும். அப்படிக் கொடுப்பதற்குக் கனம் மந்திரி அவர்கள் யோசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பொதுப்படையாக இந்த மசோதாவின் ஷரத்துக்கள் எல்லாம் நல்ல முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. அவைகள் வரவேற்கத்தக்கதாகவே இருக்கின்றன. தொழிலாளர்களுடைய நலனைப் பாதுகாக்க இன்றையதினம் இது ஏற்பட்டது என்பதில் சந்தேகமில்லை. ஆகவே இந்த மசோதாவை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். அப்படி வரவேற்பதோடு வெகு சீக்கிரத்திலேயே இதை அமுல்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டு அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கனம் மந்திரி அவர்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

SRI M. JAGANNATHAN : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, இந்தப் பீடி தொழிலாளர்களுடைய மசோதாவை மனப்பூர்வமாக வரவேற்கிறவர்களில் நானும் ஒருவனாக இருக்கிறேன் என்பதை ஆரம்பத்திலேயே நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மசோதாவானது பீடித் தொழிலாளர்களுடைய நலனை நம்முடைய ராஜ்யத்தில் கவனிப்பதற்காகவும், அவர்களுடைய வாழ்க்கை வசதியை அபிவிருத்தி செய்து கொடுப்பதற்காகவும் கொண்டு வரப்பட்ட மசோதா என்பது நமக்கு நன்றாகத் தெரியும். எல்லா நாகரீக நாடுகளிலும் தொழிலாளர்களுடைய முக்கியத்துவத்தையும் அவர்களுடைய நன்மையையும், அவர்களைப்பற்றி எல்லா தொழில் துறையிலும் மிகவும் சிரத்தையுடன் கவனிக்கப்பட்டு வருகிறது. அவர்களை நல்ல முறையில் கண்காணித்து அந்த நாடுகளில் வாழ்கின்ற தொழிலாளர்கள் நல்ல முறையில் அவர்களுடைய வாழ்க்கையை வசதியோடு நடத்திக்கொள்வதற்கு வசதி செய்து கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் நம்முடைய நாட்டில் இந்தப் பீடித்தொழிலாளர்களுடைய நிலைமை மிகவும் பரிதாபகரமான நிலைமையில் இருக்கிறது. சட்ட மூலமாக கட்டுப்படுத்தப்பட்ட தொழில்களில் இந்தப் பீடித் தொழிலும் ஒன்றாக இது வரையிலும் என் கொண்டுவரப்படவில்லை, அது என்ன காரணத்தாலோ என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனாலும் இந்தச் சர்க்கார் இவ்வளவு கால தாமதம் ஆகியும், காலம் தாழ்த்தியாவது இவ்வளவு ஆண்டுகளுக்குப் பிறகாவது பீடித் தொழிலாளர்களுடைய நன்மையில் அவர்களுடைய கவனத்தைச் செலுத்தியிருக்கிறார்கள் என்றால் நாம் அந்த அளவுக்கு அரசாங்கத்தைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். இப்படிப்பட்ட பீடித் தொழில் நம்முடைய மாகாணத்தில் ஏறக்குறைய லட்சத்தில் பத்தாயிரம் ஜனங்களுக்குத் தினந்தோறும் வேலை கொடுத்துக்கொண்டு வருகிறது. ஒவ்வொரு நபரும் ஏறக்குறைய ஆயிரம் பீடிகளை ஒரு நாளைக்குச் சுற்றுவதை வைத்துக்கொண்டு இந்தக் கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறது. கிராமப் புறங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருந்துகொண்டிருக்கிற இந்த நிலைமையில் இந்தப் பீடி தொழிலில் ஏறக்குறைய இந்த அளவிற்குக் கிராம மக்களுக்கு வேலை கொடுத்து வேலையில்லா திண்டாட்டத்தை ஒழிக்க முடிகிறது. அவர்களுடைய பொருளாதாரத்தையும் கொஞ்சம் உயர்த்துவதற்கும் இது பயன்பட்டுக்கொண்டிருக்கிறது. இந்தத் தொழிலில் கணிசமான முறையில் பெண்களும் குழந்தைகளும் ஈடுபடுத்தப்பட்டிருக்கிறார்கள் என்று நாம் உணருகிறோம். பெண்களும், குழந்தைகளும் இந்தத் தொழிலில் அதிகமாக வேலை செய்கிற காரணத்தால் சட்ட மூலமாக இந்தப் பீடி தொழிலானது இது வரையிலும் கட்டுப்படாமல் இருந்து கொண்டிருந்த காரணத்தால் இந்தத் தொழிலில் ஈடுபட்டு வேலை செய்துகொண்டு வந்த பெண்களுடைய நிலைமை, குழந்தைகளுடைய

12th September 1958] [Sri M. Jagannathan]

நிலைமை மிகவும் மோசமானதாக இருந்துகொண்டு வந்திருக்கிறது. இந்தத் தொழிலில் இருக்கக்கூடிய இன்னல்களையும் கெடுதல்களையும் ஆராய்ச்சி செய்து ஒரு அறிக்கை சர்க்கார் தரப்பிலேயே கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அறிக்கையில் சுட்டிக்காட்டியுள்ள குறைகள் எல்லாம் முதலாவதாக இந்தத் தொழிலில் " **Unhealthy conditions of Labour** " என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தொழிலாளர்களுக்கு வேண்டிய நல்ல வசதிகள் கொடுக்கப்படவில்லை, அதாவது வேலை செய்வதற்கு வசதிகள் கொடுக்கப்படவில்லை. இது முதலாவது குறை. —

அடுத்தபடியாக இந்தப் பீடி தொழிலில் வேலை செய்கிற தொழிலாளர்கள் அநேக மணி நேரம் வேலை செய்ய வற்புறுத்தப்படுகிறார்கள். அவர்களுடைய வேலைக்கு காலவரையரைகள் நியமித்திருப்பதாகத் தெரியவில்லை.

மூன்றாவதாக, இந்தத் தொழிலில் பெண்களும், பால் மணம் மாறாத பச்சிளங் குழந்தைகளும் எந்த விதமான ஒரு நல்ல நோக்கத்துடனும் நல்ல ஒரு அமைப்புடனும் அவர்களை இந்தத் தொழிலில் ஈடுபடுத்தப்படவில்லை. அவர்களை ஒரு எதாச்சாதிகாரமாக பீடித் தொழில் முதலாளிகள் நடத்திக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. " **Indiscriminate employment of women and children** " என்று அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இந்தப் பீடித் தொழிலிலே ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு, 11-20 a.m.
அவர்களுடைய அன்றாடத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதற்கு வேண்டிய முறையிலே கூட ஊதியம் கொடுக்கப்படுவது இல்லை. பீடி முதலாளிகள் தங்களுடைய தொழிலாளர்கள் வருமானத்திலிருந்து தங்கள் இஷ்டம்போல் காரணம் எதும் இன்றி, கணக்கு எதும் காட்டாமல் கூலியைக் குறைத்துக்கொள்வது வழக்கம். "அன்ரீஸனபிள் டிடக்ஷன் ஆப் வேஜஸ்" என்று அவர்கள் ஆங்கிலத்திலே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இந்தத் தொழிலில் இரண்டு முறையாக வேலை கவனிக்கப்பட்டு வருகிறது. முதலாவது முறை, "டைரக்ட் முறை" என்று சொல்லக்கூடிய விதத்தில் பீடி முதலாளிகள் இருக்கிறார்கள், அதாவது வேலையாட்களை அமர்த்துவது, பீடி சுற்றுவதற்கு வேண்டிய "ரா மெட்டீரியல்ஸ்" என்று சொல்லக்கூடிய பொருள்களையெல்லாம் தொழிலாளர்களுக்குக் கொடுப்பது, தொழிலாளிகளுக்கு அட்வான்ஸ் சம்பளம் பட்டுவடா கொடுப்பது என்ற முறை. மற்றொரு முறை, "இன்டைரக்ட் முறை". அந்த முறையிலே அவர்கள் தங்களுடைய தொழிலை, பலவித ப்ராஞ்சுகளாகப் பிரித்து, அவைகளை மிட்டில்மென் கண்டிராக்டர்கள் என்று சொல்லக் கூடியவர்களிடம் கொடுத்து, அவர்களுக்கு வேண்டிய ரா மெட்டீரியல்ஸ் முதலியவைகளைக் கொடுத்து அவர்கள் மூலம் தொழிலை நடத்துவது.

(Mr. Speaker in the Chair.)

இப்பொழுது இருக்கும் சூழ்நிலையில் நேரடியான முறை (டைரக்ட் முறை) எதோ காரணத்தினால் கொஞ்சம் கொஞ்சமாகப் பீடி முதலாளிகளால் கைவிடப்பட்டு வருகிறது. அதற்குக் காரணம் நம்முடைய மாநிலத்திலே பலவிதமான தொழில் சட்டங்கள் அமுலாக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, சென்னை பாக்டரிகள் சட்டம் இருக்கிறது. அதன் பிறகு, பேமென்ட் ஆப் வேஜஸ் ஆக்ட் என்று இருக்கிறது. அதேபோல், மட்டர்னிடி பெனிபிட் ஆக்ட் இருக்கிறது. அதன் பிறகு, மட்ராஸ் ஷாப் அஸிஸ்டென்ட்ஸ் அண்டு எஸ்டாப்ளிஷ்மென்ட் ஆக்ட் இருக்கிறது. இதைப் போன்ற சட்டங்களெல்லாம் தொழிலாளர்களின் நன்மையைப் பாதுகாப்பதற்காக எற்படுத்தப்படக்கூடிய சட்டங்கள். ஆனால், இந்தப் பீடி முதலாளிகள் இம்மாதிரியான சட்டங்களைக் கொஞ்சங்கூட மதிப்பது கிடையாது. அந்தச் சட்டங்களினுடைய ஷரத்துக்களைக் கொஞ்சங்கூட அவர்கள் அமுலுக்குக் கொண்டு வருவது இல்லை. தங்களுடைய தொழிலைப் பொறுத்த வரை. அதற்குக் காரணம், அவர்கள் இதை எதோ ஒரு குடிசைத் தொழிலாக மதித்துக்கொண்டு, இதுவரை சட்டம் எதும் சர்க்காரால் கொண்டுவரப்படவில்லை என்ற காரணத்தினால் அவர்கள் இம்மாதிரி நடத்திக்கொண்டு வந்திருக்கிறார்கள்.

மேலும், இந்தத் தொழில் சட்டங்கள் எல்லாம், அவர்கள் டைரக்ட் முறை என்று சொல்லக்கூடிய நேரடி முறையிலே பீடித் தொழிலை நடத்தி வந்தால் அவர்களைப் பாதிக்கும். ஆகவே, அந்தச் சட்டங்களிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக நேரடி முறையைக் கைவிட்டு மிட்டில்மென்ட் கண்டிராக்டர்கள் மூலமாக அவர்கள் இந்த வேலையை மேற்கொண்டு நடத்திக்கொண்டு வருகிறார்கள். அதனால், அவர்களுக்குக் கொள்ளை லாபம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. நாளுக்கு நாள் அவர்கள் பணக்காரர்களாக, பெரிய செல்வச்சீமான்களாக மாறிக்கொண்டு வருகிறார்கள். அதே சமயத்தில் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் ஏழைத் தொழிலாளியின் வாழ்க்கை நிலைமை மிக மிக மோசமாக மாறிக்கொண்டு வருகிறது.

இந்தப் பீடித் தொழிலை அரசாங்கம் இப்பொழுதுதாவது சட்டம் மூலம் கட்டுப்படுத்த முன்வந்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது என்று குறிப்பிட்டேன். இந்தப் பீடித் தொழிலிலே ஐந்து விதமான கட்டங்கள் (ஸ்டேஜ்கள்) இருக்கின்றன. (1) பீடி இலையை வெட்டுவது, (2) சுற்றுவது, (3) சுற்றப்பட்ட பீடியின் முனைகளை மூடுவது, (4) உஷ்ணத்தைக் கொடுப்பது (வார்மிங் தி பீடி), (5) லேபல்லிங் அண்டு பாக்கிங். இந்த ஐந்து விதமான ஸ்டேஜ்கள் என்று சொல்லப்படுகிற கட்டங்களிலே எந்த விதமான தொழிலாளர்கள் அமர்த்தப்பட்டு வந்திருக்கிறார்கள் என்று பார்க்கும்போது, முதலாவது முறை "கட்டிங் ஆப் ராப்பர் லீவ்ஸ்" என்னும் கட்டத்திலே பெரும்பாலும் சிறுவர்கள் தான் ஈடுபடுத்தப்படுகிறார்கள். அதுமாத்திரமல்ல. ரிங் லேபல்லிங் என்று சொல்லக்கூடிய, பீடிகளின் முனைகளைச் சுற்றுவதற்கு அமர்த்தப்படுபவர்களும் சிறுவர்களே. பீடி சுற்றுவது, பீடி முனையை மூடுவது போன்ற அந்தக் கட்டங்களிலெல்லாம் "**adults**" என்று சொல்லக்கூடிய, வயதுவந்த ஆண்களும் பெண்களும் அதிலே வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த ஐந்து விதமான கட்டங்களிலே ஆண்களும் பெண்களும் குறிப்பாக சின்னஞ்சிறுவர்களும் அமர்த்தப்பட்டிருக்கின்ற காரணத்தினாலே, அதிலே மிட்டில்மென்ட் கண்டிராக்டர்கள் மூலமாக இந்த வேலை பெரும்பாலும் மேற்கொள்ளப்பட்டு வருகிற காரணத்தினாலே, இந்தத் தொழிலாளர்களுக்கு வேண்டிய நன்மைகள் பாதுகாப்புகள் எதும் கொடுக்கப்படுவதில்லை. ஏனென்றால், தொழில் சட்டங்கள் எல்லாம் அவர்களைப் பாதிக்க முடியாதபடி அவர்கள் தப்பித்துக்கொண்டிருக்கிறார்கள். எனவேதான், நான் இந்தச் சந்தர்ப்பத்தில் சர்க்காரை மிகவும் பாராட்டக் கடமைப் பட்டிருப்பதற்குக் காரணம். அவர்கள் சட்ட மூலமாக இதுவரை கட்டுப்படுத்தாதுஇருந்து, இந்தத் தொழிலை இப்போதாவது கட்டுப்படுத்த முன்வந்திருக்கிறார்கள். இதனால் தொழிலாளிகளுக்குப் பலவித நன்மைகள் ஏற்படுமே தவிர, தீங்கு ஏற்படாது.

இருந்தாலும், அதேசமயத்தில் மற்றொன்றை நான் கூற விரும்புகிறேன். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும் சமயத்தில் பலவிதமான தீமைகள் ஏற்பட்டாலும் ஏற்படலாம். பீடி முதலாளிகள் இந்தச் சட்டம் அமுலுக்கு வந்த நேரத்திலே பலவிதமான காரியங்களைத் தொழிலாளர்களுடைய நன்மைக்காகச் செய்யவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது. அந்தச் சந்தர்ப்பத்திலே அவர்கள் மிகவும் அதிகமான பொருளாதாரச் செலவு செய்ய வேண்டி ஏற்படுகிற காரணத்தினாலே, அவர்களுடைய காஸ்ட் ஆப் ப்ரொடக்ஷன் என்று சொல்கிற, பீடி உற்பத்திச் செலவுத் தொகை ஓரளவுக்கு அதிகம் ஆகும். காஸ்ட் ஆப் ப்ரொடக்ஷன் அதிகமானால், அதன் பிறகு முதலாளிகளெல்லாம் தங்களுடைய லாபம் குறைந்து விடுகிறதே என்ற கவலையினால் கொஞ்சங் கொஞ்சமாகத் தங்களிடத்தில் வேலை செய்து வருகின்ற பெண்களையும் குழந்தைகளையும் குறைத்து விடுவார்கள். ஆட் குறைப்பு இந்தத் தொழிலிலே ஏற்படும். அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் தலைவிரித்துத் தாண்டவம் ஆடும். கிராமப்புறங்களில் பெரும்பாலான ஏழை மக்கள், குறிப்பாகப் பெண்களும் சிறுவர்களும் ஓரளவு உழைத்துத் தங்களுடைய வருமானத்தைப் பெருக்கிக் கொள்வதற்கு வாய்ப்பு அளிக்கும் இந்தத் தொழில் துறையிலே இந்தச்

சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டதற்குப் பிறகு நான் குறிப்பிட்டது போல், ஓரளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுமாயின், அது நாம் கிணறு வெட்ட பூதம் புறப்பட்டதாக மாறிவிடும் என்பதைக் கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்கு நான் கொண்டுவர விரும்புகிறேன். எனவே தான் இந்தச் சந்தர்ப்பத்திலே நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்வதெல்லாம், இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும்போது, இதனுடைய தீமைகளை ஓரளவுக்கு நிவர்த்தி செய்ய என்ன விதத்தில் அவர்சள் பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள முடியுமோ அந்த விதங்களில் எடுத்து, இந்தச் சட்டத்தை அமுலாக்கி தொழிலாளர்களுடைய நலனையும் உரிமையையும் பாதுகாக்க முன் வரவேண்டுமென்று சேட்டுக்கொண்டு, இந்தச் சட்டத்தை நான் மீண்டும் வரவேற்று என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கின்றேன்.

MR. SPEAKER : Will the Hon. Minister reply to-day or tomorrow? How long will he take to reply? Will half an hour do?

THE HON. SRI R. VENKATARAMAN : I will reply to-day.

MR. SPEAKER : He will then reply at 1 p.m. There are ten Members wanting to speak. I can ask nine Members to speak, if I allow ten minutes for each Member. The tenth Member also I will somehow accommodate. So, I shall allow only ten minutes for each Member from now on.

* SRI J. MATHA GOUDER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தப் பீடித் தொழிலாளர்களுடைய மசோதாவை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்தப் பீடி மசோதாவானது முதன் முதலில் நம்முடைய ராஜ்யத்தில் அமுலுக்கு வருவதைப் பார்த்து மிகவும் சந்தோஷம் அடைகிறோம். அதிலும் குறிப்பாகத் தொழில் அமைச்சர் அவர்கள் பீடித் தொழிலாளர்களுடைய நலனுக்காக இதைக்கொண்டு வந்திருப்பதற்காக நான் தொழிலாளர்களுடைய சார்பில் உங்கள் மூலமாக அவருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் பீடித் தொழில் நம் மாகாணத்தைப் பொறுத்த வரைக்கும் 11-45
சுமார் ஒரு லட்சம் தொழிலாளர்களுக்கு மேல் ஈடுபட்டிருக்கிற தொழில் என்பது நன்கு புரிந்திருக்கிறது. பொறுக்குக் கமிட்டி இந்த மசோதாவைப் பரிசீலித்தபோது நானும் அக்கமிட்டியில் ஒரு அங்கத்தினனாக இருந்தேன். திருநெல்வேலி, வேலூர், திருச்சி முதலிய மூன்று ஜில்லாக்களிலும் சுற்றுப்பிரயாணம் செய்து பொறுக்குக் கமிட்டி இந்தத் தொழில் சம்பந்தமான விஷயங்கள் எல்லாவற்றையும் சேகரித்தது. அங்குள்ள தொழிலாளர்களிடையேயும், முதலாளிகளிடையேயும் இதுபற்றி விசாரித்த காலத்தில் இந்தத் தொழிலின் முக்கியத்துவம் புரிந்தது. தொழிலாளர்களுடைய நலனுக்காக இந்தச் சட்டம் கொண்டுவரப்படுவது மிக மிக முக்கியமானது என்பதும் தெரிந்தது. ஆனால் பொறுக்குக் கமிட்டிக்கு இந்த மசோதா அனுப்பப்படுவதற்கு முன்பாகவே "பீடித் தொழிலாளர்களுக்கு இத்தகைய சட்டம் அவசியமானது. இந்தச் சட்டத்தை நாம் நிறைவேற்றியாக வேண்டும்" என்பதாக இந்தச் சபையில் கனம் தொழில் அமைச்சர் அவர்கள் கேட்டிருக்கிறார்கள். நாம் அதை மறந்து விட முடியாது. இப்படியெல்லாம் இருக்கிறபோது இன்றைக்கு நாட்டில் என்ன நடக்கிறது? சேலத்திலும், திருச்சியிலும் "இந்தச் சட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்" என்பதாகத் தொழிலாளர்கள் கோஷம் போட்டுக்கொண்டு கலெக்டர் ஆபீஸ் முன்பு இருக்கிறார்கள் என்பதைப் பார்த்து நாம் மிகவும் வருத்தப்படவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். இவ்வாறு என் கோஷம் போட்டுக் குழப்பத்தை உண்டாக்கவேண்டும் என்பதைத்தான் நாம் பரிசிலனை செய்ய வேண்டும். சில அரசியல் கட்சிக்காரர்களின் தூண்டுதலின் பேரிலேயே இந்தமாதிரியான கிளர்ச்சிகள் நம் நாட்டில் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன என்பதை

மறந்துவிட முடியாது. தொழிலாளர்கள் இந்தமாதிரியாகச் சட்டம் வேண்டும் என்பதற்காகக் கிளர்ச்சியில் இறங்கத் துடித்தாலும் கூட நம்முடைய சர்க்கார் என்ன செய்துகொண்டிருக்கிறது என்பதை நன்கு உணர்ந்துகொள்ளக் கூடிய வாய்ப்புக்களைப் பெற்ற அரசியல் கட்சிக்காரர்கள் "நீங்கள் இவ்வாறு கிளர்ச்சி செய்யவேண்டாம். சர்க்காரே இந்த மாதிரியான ஒரு மசோதாவைக் கொண்டுவரப் போகிறார்கள். பொறுக்குக் கமிட்டி இதுபற்றிப் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறது. அடுத்த சட்டசபைக் கூட்டத்திலேயே அது நிறைவேற்றப்படும்" என்பதாகச் சொல்லி கிளர்ச்சி வேண்டாம் எனப் புத்திமதி சொல்ல வேண்டியவர்களை இன்றைக்கு இந்தக் கிளர்ச்சிக்குத் தலைமை தாங்கி நடத்துகிறார்கள் என்பதையும் நாம் மறந்துவிடுவதற்கில்லை. இதற்கு முக்கியமான காரணம் சர்க்கார் கொண்டு வந்து நிறைவேற்ற இருக்கிற மசோதா தங்களால்தான் கொண்டு வரப்பட்டது என்கிற தப்பான எண்ணத்தை மக்களிடையே பரப்பிவிட்டு விட்டால் அதனால் தங்கள் கட்சிக்குச் சாதகமான சூழ்நிலையை, செல்வாக்கை உண்டாக்கிக் கொண்டுவிடலாம் என்பதைத் தவிர வேறு நோக்கம் அவர்களுடைய இப்படிப்பட்ட பரிதாபகரமான காரியங்களுக்கு இருக்க முடியாது. இந்த ஒரு நோக்கத்தில், அடிப்படையில்தான் இன்றைக்கு சேலம், திருச்சி முதலிய ஜில்லாக்களின் கலெக்டர் ஆபீஸ் முன்பாகத் தொழிலாளர்கள் கூச்சல் போட்டுக் கொண்டு நிற்கும்படியாகச் செய்திருக்கிறார்கள். எப்படி இருப்பினும் கூட இந்தச் சட்டம் காங்கிரஸ் சர்க்காரால் கொண்டுவரப்பட்டது என்பதைத் தொழிலாளர்கள் மறந்துவிடமாட்டார்கள் என்பதை நான் உங்கள் மூலமாகச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக இந்தத் தொழில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இன்றைக்கு நடைபெறாமல் பல பல இடங்களிலும், வீடுகளிலும் நடைபெற்று வருகிறது என்பதற்குக் காரணம் முதலாளிகளுடைய சூழ்ச்சிதான். பாக்டரி சட்டம் ஏற்பட்டபிறகு பாக்டரி சட்டத்தின் கீழ் ஒரு குறிப்பிட்ட இடத்தில் 30 தொழிலாளர்களுக்கு மேல் வேலை செய்தார்களானால் தொழில் சட்டத்தின் கீழ் நாம் கட்டுப்படும்படி நேரிடுமே, அவர்களுக்கு தொழில் சட்டத்தில் கண்டபடி எல்லா விதமான சலுகைகளும் கொடுக்கும்படியாக நேரிடுமே என்கிற ஒரே நோக்கத்துடன்தான் அங்கங்கே புகையிலைத் தூளையும், இலையையும் ஒருவர் எடுத்துக்கொண்டுபோய் வீடுவீடாகக் கொடுத்து, அவர்கள் வீட்டிலிருந்தே சுருட்டிக் கொடுக்கப்படுகிற பீடிகளைத் திரும்பவும் சேகரித்து வந்துவிடுகிறார்கள். இது முதலாளிகளுடைய சூழ்ச்சியைத் தவிர வேறு இல்லை என்பது நன்றாகப் புரிந்திருக்கிறது. ஆகவே யார் முதலாளி என்பதையும் நிர்ணயித்துவிட வேண்டும். டிரேட் மார்க் உள்ளவர்களை முதலாளிகள் என்று நிர்ணயிக்கலாம் என்பதாக ஒரு அங்கத்தினர் சொன்னார். இதிலும் சிக்கல்கள் உண்டாகின்றன. வேறு தொழிலை எடுத்துக் கொண்டால் உதாரணமாகத் தோட்டத் தொழிலை எடுத்துக்கொண்டால் நிலம் யார் பேருக்குப் பட்டாவில் இருக்கிறதோ அவரை முதலாளி என்று சொல்லிவிடலாம். அதே மாதிரி கம்பெனி யார் பேரில் ரிஜிஸ்டர் ஆகியிருக்கிறதோ அவரை அந்த ஸ்தாபனத்தின் முதலாளி என்று கருதிவிடலாம். ஆனால் இந்தப் பீடித் தொழிலில் இவ்வாறு சொல்ல முடியாது. அங்கங்கே பல வீடுகளில் இந்தப் பீடி சுற்றப்பட்டு சாக்குப் பையிலோ, வேறு பையிலோ போடப்பட்டு இங்கே வருகிறது. முதலாளியாக இருக்கக்கூடியவர் பினாமியாக இருந்துவிட்டால் தப்பித்துக்கொள்ள முடியும். அப்படியே தொழிலாளர்கள் அந்த இடத்திற்குப் போகும்போது வீடு பூட்டிக் கிடக்கலாம். திறந்து பார்த்தால் சாக்குப் பைகள் கூட அங்கே இல்லாமல் செய்திருக்க முடியும். மேலும் டிரேட் மார்க் உள்ளவர்களுக்குத்தான் லைசென்சு கொடுப்பது என்று செய்துவிடலாம் என்றால் அது அரசியல் சட்டத்திற்கே முரணாக இருக்குமென்று தோன்றுகிறது. ஆகவே இப்போது இருக்கிறபடியே சட்டத்தை நிறைவேற்றினால் பின்னால் இது விஷயமாக எப்படிப்பட்ட திருத்தம் கொண்டுவந்தால் இந்த சிக்கலை நீக்க முடியும் என்று யோசித்துக் கொள்ளலாம் என்று எதி கட்சிக்காரர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

12th September 1958] [Sri J. Matha Gouder]

அடுத்தபடியாக இந்தத் தொழிலில் சிறுவர்கள் ஈடுபடுத்தப்படுகிருர்கள் என்று கூறப்பட்டது. அதற்குக் காரணத்தைப் பார்க்கும்போது பீடித் தொழிலாளர்களுக்குக் கிடைக்கிற ஊதியம் மிகவும் சொற்பமாக இருப்பதால் குடும்ப நிர்வாகத்தின் பொருட்டு தங்கள் சிறுவர்களேயும் ஈடுபடுத்தி வருமானத்தைக் கொஞ்சம் உயர்த்திக்கொள்ளத் தொழிலாளர்கள் நினைக்கிருர்கள். ஆகவே இந்தச் சட்டத்தின் மூலமாக அவர்களுடைய கூலி விகிதத்தை நல்ல முறையில் நிர்ணயிப்பதற்கு முடியாவிட்டாலும் வேறு எந்த வகையில் செய்யலாம் என்பதை யோசிக்கவேண்டும். இதற்காக ஒரு கமிட்டியை நியமித்திருக்கிருர்கள். அந்தக் கமிட்டி சரியான முறையில் பரிசீலனை செய்து பீடித் தொழிலாளர்களுக்கு நியாயமான நல்ல கூலியை நிர்ணயித்து விடுவார்களேயானுல் தங்கள் குழந்தைகளை இந்தத் தொழிலில் ஈடுபடுத்துவதற்குப் பதிலாக அவர்களை நன்றாகப் படிக்க வைக்க முடியும். நல்ல முறையில் குடும்பத்தை ரட்சிக்க முடியும். சிறுவர்கள் பீடித் தொழிலில் ஈடுபடுத்தப்படமாட்டார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக பெண்களைப் பற்றிப் பேசினுர்கள். பெண்கள் வீட்டிலேயே இலையை வெட்டுவதற்கும், கழுவுவதற்கும் வேலையில் ஈடுபடுத்தப்படுகிருர்கள். அவர்களுக்கும் இந்தச் சட்டத்தில் இடம் கொடுக்கப்படவில்லையேயென்ருல் அது முடியாத காரியம் என்று நினைக்கிறேன். பீடி இண்டஸ்டிரி என்று ஒரு இடத்தில் வேலைசெய்கிற தொழிலாளர்களுக்குத்தான் இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறதே தவிர வீட்டுக்கு வீடு இந்தச் சட்டத்தை அமுல் நடத்துவது என்பது முடியாத காரியம். இது எப்படி என்பதை அமைச்சர் அவர்கள் விளக்கமாக எடுத்துச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக முதலாளிகள் ஒன்று சொல்கிருர்கள். பீடித் தொழில் வருஷத்தில் 12 மாதங்களும் நடக்காது. மழை பெய்துவிட்டால் தொழில் நடக்காது. தொழில் நடக்காத மாதங்களில் எப்படிச் சம்பளம் கொடுப்பது என்கிருர்கள். வேலூரில் இருக்கக்கூடிய முதலாளிகள் தான் மழை பெய்துவிட்டால் தொழில் செய்யமுடியாது என்று சொன்னுர்கள். வேலூரில் வருஷத்தில் ஒரு மாதத்தில் ஒரு நாளாவது மழை பெய்யுமா என்று சந்தேகப்படவேண்டும். மழை அதிகமாக இல்லாத பிரதேசம் அது. ஆனுல் மழை அதிகமுள்ள திருச்சினப்பள்ளி, திருநெல்வேலியில் இருக்கக்கூடியவர்கள் மழையினுல் பீடித் தொழில் பாதிக்கப்படுவதில்லை. மழை பெய்தாலும் தொழில் செய்யலாம் என்று சொல்கிருர்கள். ஆகவே வருஷம் பூராவும் வேலை இருக்காது என்று சொல்லிக்கொள்வதும் முதலாளிகளுடைய சூழ்ச்சிதான். ஒரே ஒரு விஷயம். எல். 4, எல். 2, என்பதைப்பற்றி மட்டும் சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். லைசென்சு பெற்றுக்கொண்டு எந்த ஒரு இடத்தில் இருந்து உற்பத்தி 11-40 p.m.
செய்ய நினைக்கிருர்களோ அதற்கு எல். 4, லைசென்சு வாங்கியிருக்கவேண்டும். பல பலயிடத்தில் செய்யப்படுவதைத் திரட்டி ஒரு இடத்திலிருந்து விநியோகம் செய்வதற்கு எல். 2 லைசென்சு வழங்கப்படுகிறது. ஓரிடத்தில் அதைச் சேர்த்துவைத்து கோடௌன் ஆக வைத்துக்கொண்டு விநியோகிப்பது என்ருலும் லைசென்சு தேவை. இதைத் தடுப்பதற்காக இன்னுருக்குத்தான் எல்-4 லைஸென்ஸ் கொடுக்கலாம், இன்னுருக்குத்தான் எல்-2 லைஸென்ஸ் கொடுக்கலாம் என்று நிபந்தனை விதிக்கப்பட வேண்டுமானுல், அதற்கு மத்திய எக்ஸைஸ் சட்டம் திருத்தப்பட வேண்டும். மத்திய எக்ஸைஸ் சட்டத்தை நாம் திருத்த முடியாது. எல்-4 லைஸென்ஸ் எல்லோருக்கும் கிடைக்காது. உற்பத்தியாகும் இடத்திற்குத்தான் எல்-4 லைஸென்ஸ் உண்டு. ஆனுல் எல்-2 லைஸென்ஸ் யாரும் பெறமுடியும். எல்-2 லைஸென்ஸ், விற்பனையாளருக்குக்கூட கிடைக்கும். இப்போதுள்ள மத்திய எக்ஸைஸ் சட்டம் அவ்வாறு இருக்கிறது. அதை நாம் திருத்த முடியாது. நம்மால் இயற்றப்படும் இச்சட்டம், தமிழ் நாட்டிலுள்ள பீடித் தொழிலாளர்கள் அனைவருக்கும், அவர்கள் நன்ருக முன்னுக்கு வருவதற்குத் துணை புரியும். இத்தகைய சட்டத்தை இயற்றுவதால், நாம் மற்ற மாநிலங்களுக்கும் வழிகாட்டியாக ஆகி விட்டோம். நாம் இத்தகைய சட்டத்தை இயற்றுவதானது, "அடுத்த மாநிலத்தின் சர்க்காரைக்கூட இத்தகைய

சட்டத்தை இயற்றவேண்டுமென்று மத்திய சர்க்கார் தூண்டுவதற்கு ஏதுவாக" இருக்கும். எனவே நாம் இயற்றும் சட்டம் மற்ற ராஜ்யங்களில் இத்தகைய சட்டம் இயற்றப்படுவதற்குத் தூண்டுகோலாக இருக்கும் என்று பெருமையுடன் சொல்லிக்கொள்கிறேன். இத்துடன் என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

SRI K. S. G. HAJA SHERIFF : Mr. Speaker, Sir, let me first of all express my grateful thanks to you and the Hon. Minister for Labour for permitting me to take part in this debate though I was a Member of the Select Committee. If I have been constrained to speak on this Bill now, it is only on account of my genuine fear whether this Bill which is intended to do good to labour will not really do good to them in fact.

Sir, I will confine my remarks to one or two things. This is predominently a cottage industry. This Bill envisages that the provisions of the Factories Act should apply to this industry. A couple of lakhs of people are engaged in this industry and of them more than 16 per cent are ladies. It is also said that more than 60 per cent of the beedis manufactured in our State is marketed in other States in India. Our beedies are having more sales in the other States because the price of beedis manufactured here is lesser than those manufactured locally in those States. Therefore we should remember that this price factor is an important thing in maintaining our present export. If as envisaged in the Bill the provisions of the Factories Act were made applicable to this industry the cost of production would naturally go up. It is bound to go up. If the prices of the beedis manufactured go up, it is a matter for examination whether we will be in a position to sell the same quantity of beedis as we do now in the other States or whether the exports will go down. During the examination of this question the Select Committee found that the margin of profit in this industry was very little. If the cost of production goes up as a result of the application of provisions of the Factory Act, naturally the selling price of these beedis will also go up and that would result in consumer resistance in the other States in which these beedis are now sold. I leave it to the House to decide whether, as a result of this, there would not be fall in production, unemployment, under-employment and inconveniences caused to the industry. This is an important question which I would request the Hon. Minister for Labour to examine very carefully. I am of the opinion that instead of placing this under the Factories Act, if we increase and stabilise the wages and conditions of work of the labourers, it would be a very good thing.

I should like to point out in this connection that we do not enjoy a monopoly so far as this industry is concerned. There are other States engaged in this industry and trade. First comes Madhya Pradesh, then comes Uttar Pradesh and then Bombay. Our State is the fourth in the order. If there is a fall in production in this State consequent on the introduction of this measure, then naturally beedis manufactured in the other States will flow into our State. People employed in the industry in this State will

12th September 1958] [Sri K. S. G. Haja Sheriff]

have to shift to other States. The State also will lose by way of fall in sales tax. I fear this would cause immense harm to labour. I am not decrying steps taken to improve conditions of labour. We are wedded to improve the conditions of labour. In that direction there is no second say in the matter. But I only want that the Bill which aims at doing good to labour should not ultimately prove otherwise. Therefore in this particular case I would appeal to the Hon. Minister to devote more attention and then make this into law.

* SRI A. V. P. ASAITHAMBI : கனம் தலைவர் அவர்களே, பீடித் தொழிலுக்கும் பீடித் தொழிலாளர்களுக்கும் சரியான பாதுகாப்பு ஏற்படுத்துவதற்காகக் கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த மசோதாவை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். பீடித் தொழிலும் பீடித் தொழிலாளர்களும் சரிவரப் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு மசோதா தயாரிக்கப்பட்டது. மாநிலத்திலுள்ள பீடித் தொழிலாளர்களும் பீடி முதலாளிகளும் அந்த மசோதாவைக் குறித்துக்கொண்டுள்ள கருத்துக்களை அறிந்து கொள்வதற்காக, ஒரு குழு அமைக்கப்பட்டு, அந்தக் குழு மாநிலம் பூராவும் சுற்றி வந்தது. பீடித் தொழிலாளர்களின் பிரதிநிதிகளும் பீடி முதலாளிகளின் பிரதிநிதிகளும் அக்குழுவினிடம் வந்து, சாட்சியம் கொடுத்தார்கள் ; அவர்களுக்கு இருக்கும் கஷ்ட நஷ்டங்களைப்பற்றி குழுவினிடம் விளக்கமாக எடுத்துச் சொன்னார்கள். அவைகளையெல்லாம் அறிந்துகொண்ட குழு மசோதாவைத் திருத்தியமைத்தது. அவ்வாறு திருத்தியமைக்கப்பட்ட மசோதா இப்போது இந்தச் சபைக்கு மறுபடியும் வந்திருக்கிறது. சபையில் இருக்கும் மதிப்பிற்குரிய அங்கத்தினர்கள் சிலர் இம் மசோதாவிற்குச் சில பல திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். இந்த மசோதா உடனடியாகச் சட்டமாக்கப்பட்டு, சட்டம் உடனடியாக அமலுக்குக் கொண்டுவரப்பட வேண்டும் என்ற கருத்து, அந்த அங்கத்தினர்களால் அவர்களுடைய திருத்தங்களில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. நம் நாட்டைப் பொறுத்த வரையில், பீடித் தொழிலானது நெசவுத் தொழிலைப் போல் ஒரு மாபெரும் தொழில் ஆகும். பல லட்சக்கணக்கான ஆண்களும் பெண்களும் இந்தத் தொழிலை நம்பி ஜீவனம் நடத்திவருகிறார்கள். இந்தத் தொழில் இத்தனை காலம் வரையிலும் சரிவர ஒழுங்குபடுத்தப்படாமலும் சரிவர கண்காணிக்கப்படாமலும் இருந்துவந்திருப்பதையும், ஆங்காங்கே அவரவர்கள் இஷ்டப்படி இத்தொழில் நடத்தப்பட்டு வந்திருப்பதையும் ஆங்காங்கே சென்ற கமிட்டி தெரிந்துகொண்டது. தொழிலாளர்களுக்குப் பீடி சுற்றுவதற்குத் தரப்படும் கூலி நாடு முழுவதும் ஒரே மாதிரியாக இல்லாமல் பற்பல விதமாக இருப்பதையும், இடத்திற்கு இடம் ஏற்றத்தாழ்வுகளோடு இருப்பதையும் கமிட்டி பார்த்தது. எனவே, இத்தொழிலில் கூலி முதலியவைகளை ஒருதரப்படுத்துவதுடன் இத்தொழில் எந்த முறையில் நடத்தப்பட வேண்டும் என்று தொழிலை ஒழுங்கு படுத்தவும் செய்யக்கூடிய சட்டத்தைக் கொண்டு வரவேண்டியது அவசர அவசியம் ஆகும். அத்தகைய சட்டத்தைக்கொண்டு வரவேண்டியது அவசியம் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். ஆனால், காங்கிரஸ்காரர்கள்தான் இப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டுவருகிறார்கள் என்று மாதா கௌடர் சொல்வதை யாரும் ஏற்றுக்கொள்ள முடியாது. இத்தகைய சட்டத்தை காங்கிரஸ்காரர்கள் கொண்டுவந்தாலும், அவர்கள் சட்டம் கொண்டு வருவதைப் பாராட்டுவதற்கு நாங்கள் தயாராயிருக்கிறோம். காங்கிரஸ்காரர்கள் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருப்பதற்குக் காரணம் என்ன ? இத்தகைய சட்டங்களை இயற்றாவிட்டால், மாநிலத்தில் தொழிலாளர்களின் கிளர்ச்சி வலுவடைந்து குழப்பம் ஏற்படும் என்பதை அறிந்துதான் இந்தச் சர்க்கார் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். மசோதாவானது எந்த நோக்கத்துடன் கொண்டுவரப்பட்டாலும், அதிலுள்ள சாதக பாதகங்களைக் கவனிக்க வேண்டியதுதான் நம் கடமை ; "எங்களால் தான் மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது" என்று எந்த ஒரு கட்சியினர் சொல்வதும் நல்லதல்ல.

[Sri A. V. P. Asaithambi] [12th September 1958

அடுத்து, மசோதாவிலுள்ள சில அம்சங்களைப்பற்றிப் பேச விரும்புகிறேன். பாக்டரிச் சட்டத்தின்படி தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய பாதுகாப்பை இதுவரையில் பீடி முதலாளிகள் பீடித் தொழிலாளர்களுக்குக் கொடுக்காமல் இருந்து வருகிறார்கள். இந்த நிலையை மாற்றுவதற்கு மசோதா வகைசெய்கிறது. பீடித் தொழிலாளர்களுக்கு கொடுக்கப்பட வேண்டிய பாதுகாப்பிற்கு மசோதா உத்தரவாதம் செய்கிறது. இந்த அம்சத்தை அனைவரும் வரவேற்க வேண்டும். இந்த மசோதா சட்டமாகி அமலுக்குவந்தால் தங்களுக்கு என்னென்ன கஷ்டங்கள் ஏற்படும் என்று பீடி முதலாளிகள் தெரிவித்திருக்கிறார்கள். "ஒவ்வொரு பீடித் தொழிலாளியும் 150 கன அடி இடத்தில் வேலை செய்ய வேண்டும். ஒவ்வொரு தொழிலாளிக்கும் 150 கன அடி இடம் கிடைக்கக் கூடியவாறு தொழிற்சாலைக் கட்டிடங்கள் இருக்கவேண்டும்" என்று மசோதாவில் விதி வகுக்கப்பட்டிருக்கிறது. "நாங்கள் அவர்களுக்கு அவ்வளவு இடம் கொடுப்பதற்காகக் கட்டிடங்கள் கட்ட வேண்டுமென்றால் மிகவும் கஷ்டப்படுவோம்" என்று பீடி முதலாளிகள் தெரிவித்திருக்கிறார்கள். இந்தத் தொழில் நடத்தும் முதலாளிகளுக்கு அதிக லாபம் கிடைப்பதால், அந்தக் கட்டிடங்களை அவர்களே கட்ட வேண்டுமென்று நாம் வற்புறுத்துவதில் தவறில்லை.

இன்னின்ன முறைப்படி கட்டிடங்கள் கட்டி தொழிலாளர்களுக்கு வேலை தர
11-50 a.m. வேண்டுமென்ற முறையை அமுல் நடத்த நிச்சயமாக அவர்களை முன்வரும்படி நாம் வற்புறுத்த வேண்டியதுதான். இந்தச் சட்டமானது நம் ராஜ்யத்தில் மாத்திரந்தான் இப்பொழுது அமுலாகிறது என்பதை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். பக்கத்தில் இருக்கிற கேரள ராஜ்யத்திலே கடைக்கு கடை பீடி சுற்றுகிற முறை இருந்துவருகிறது. ஒவ்வொரு கடையிலும் பீடி சுற்றி விற்றுக்கொண்டு வருகிறார்கள். அங்கு இந்தச் சட்டம் கிடையாது. இங்கு நாம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றி விடுகிறோம். ஆனால் இனிமேல் முதலாளிகள் என்ன செய்வார்கள் என்று நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். 1948-ல் ஏற்பட்ட பாக்டரி ஆக்ட்படி நடக்காது ஆங்காங்கு வீடுகளுக்கு அனுப்பி வேலை வாங்கிக்கொண்டு பாக்டரி ஆக்டையே சின்னாபின்னப் படுத்துகிறார்கள் முதலாளிகள். கூலி நிர்ணயம் ஒன்றும் இல்லாமல் இஷ்டம்போல் கூலி கொடுத்து, லீவ் போன்ற பாக்டரி ஆக்ட் படி உள்ள விதிமுறைகளை நடைமுறைக்கு கொண்டு வராதிருக்கும் முதலாளிகள் இனி என்ன செய்வார்கள் என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். இந்தச் சட்டம் அமுலில் இல்லாத பிரதேசங்களில் அவர்கள் பிராஞ்சுகள் வைத்துக்கொண்டு அங்கிருந்து கொள் முதல் செய்து, வாங்கி, இங்கு விற்பனைசெய்ய வழியிருக்கிறது. அப்படி முதலாளிகள் செய்வார்களேயானால் இங்குள்ள தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்காத ஒரு நிலைமை ஏற்பட்டுவிடும். எனவே இந்த ராஜ்ய சர்க்கார் உடனடியாகக் கேரள சர்க்காரையும், மற்ற இதர சர்க்கார்களையும் இம்மாதிரி ஒரு சட்டம் கொண்டு வரும்படி மத்திய சர்க்கார் மூலம் அவர்களைக் கேட்க இந்தச் சர்க்கார் முன்வரவேண்டும். ஆனால் இங்கிருக்கிற எனது மதிப்பிற்குரிய கம்யூனிஸ்ட் அங்கத்தினர்கள், இந்தச் சட்டத்தை இங்கு உடனடியாக அமுலுக்கு கொண்டு வர வேண்டுமென்று அதிக ஆசையும், அக்கறையும் காட்டுகிறார்கள். அது, மகிழ்ச்சிக்குரிய விஷயந்தான். அடுத்தபடியாக, "ட்ரேட் மார்க்" காரர்களுக்கு மாத்திரந்தான் லைசென்சு வேண்டுமென்று சொல்கிறார்கள். அப்படிப்பட்டவர்களின் கட்சியைச் சார்ந்தவர்கள் தான் இன்று கேரளாவில் ஆட்சி புரிகிறார்கள். ஆகவே, இந்த மாதிரியான ஒரு சட்டத்தைக் கேரளா ராஜ்யத்திலும் கொண்டு வரவேண்டும், கடைக்குக் கடை பீடி சுற்றி விற்கக் கூடிய ஒரு நிலை இல்லாதபடி செய்ய வேண்டுமென்று சொல்லி இம்மாதிரியான ஒரு சட்டம் அங்கு கொண்டு வரப்பட்டால்தான் இங்குள்ள எங்களின் தொழிலாளர்கள் வாழ முடியும் என்று சொல்வார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். அம்மாதிரி எல்லாயிடங்களிலும் இம்மாதிரியான ஒரு சட்டம் வந்தால்தான் நமது ராஜ்யத்தில் உள்ள தொழிலாளர்கள் பாதிக்கப்படாமல் இருப்பார்கள். அடுத்தபடியாக, தொழிலாளர்களில் சிலர் இதில் என்ன ஆட்சேபனை கிளப்புகிறார்கள் என்றால், கூலி நிர்ணயம் செய்வதற்கு முன்பாக

இச்சட்டம் அமுலுக்கு வந்தால் எங்களுக்கு இந்தச் சட்டப்படி விதிக்கப் பட்டிருக்கும் 9 மணி நேரத்தில் நாங்கள் என்னதான் சுற்றினாலும் ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் கூட கூலி கிடைக்காமல் போகும் என்று சொல்கிறார்கள். எனவே, வேஜ்போர்ட் ஒன்று அதற்காக நியமிக்கப்பட்டிருக்கிறது என்பது உண்மையானாலும்கூட, அதையும் சீக்கிரமாக முடிவுசெய்து, கூலி நிர்ணயத்தோடு இந்தச் சட்டத்தை அமுலாக்க அவசர நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்தச் சட்டத்தையும், இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்துள்ள அமைச்சர் அவர்களையும் பாராட்டிக் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது சபையின் முன் வந்திருக்கும் மசோதாவானது மிகவும்போற்றுதற்குரிய ஒரு மசோதாவாகும். குடிசைத் தொழில்களை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்றும், இந்நாட்டிலே வாழக் கூடிய ஏழை எளிய மக்கள் நிம்மதியாக வேலைசெய்து நல்ல கூலி பெற்று வாழ வேண்டுமென்றும், அவர்களின் வாழ்க்கை நிலையை உயர்த்த வேண்டுமென்ற பரந்த நோக்கத்தோடுதான், தொழில்துறையில் பணியாற்றியிருக்கும் நமது தொழில் அமைச்சர் அவர்கள் இதை நன்கு பரிசீலித்து இந்த மசோதாவை இந்த அவையின் முன் கொண்டு வந்திருக்கிறார்கள். ஏற்கனவேயே இந்த மசோதா இந்த சபைக்கு வந்து அது ஒரு பொறுக்குக் கமிட்டிக்குச் சென்று பலரது அபிப்பிராயங்களையும், கருத்துக்களையும் கொண்டு இப்பொழுது மீண்டும் இச்சபையின் முன் சட்டமாக்குவதற்கு கொண்டுவரப் பட்டிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் இது பற்றி விவரித்துப் பேசக் கூடிய அவசியமில்லாது, ஷரத்துவாரியாக இது விவாதத்திற்கு வரும்போது அதிலுள்ள குறைகளை எடுத்துச் சொல்லிக் கொள்ளலாம், பொதுப்படையாக இதில் சிற்சில தவறுகள் இருக்குமேயானாலும் அதையும் திருத்தி நல்லதொரு சட்டமாக இதை ஆக்குவதற்காக நான் ஒரு சில விஷயங்களைப் பற்றி மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். இச்சட்டம், தொழிலாளர்களின் நன்மையைக் கருதித்தான் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதில், பல துறைகளில், பலவிதச் சிக்கல்கள் இருக்கின்றன. "கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட" கதை போல் இது ஆகக் கூடாது. இம்மசோதா, பற்பல சிக்கல்கள் கொண்ட, சிக்கல்கள நிறைந்த ஒரு சட்டமாக நடை முறையில் வருமோ என்ற ஒரு அச்சம் தோன்றுகிறது. காரணம் என்னவென்றால் தொழிலாளர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று கருதி நாம் இந்தச் சட்டம் இயற்றும்போது மறு பக்கத்தில் அதே சட்டத்தின் மூலம் தொழிலாளர்கள் பாதிக்கப்படுகிறார்கள். இப்பொழுது இந்தத் தொழிலை ஒரே யிடத்தில், ஒரு பாக்டரியாக வைதது இந்தத் தொழிலை ஆரம்பிப்பதா ? அல்லது இப்பொழுது நடந்துகொண்டிருப்பதுபோல் அவரவர்கள் வீடுகளில் இத்தொழிலை நடத்தி, ஆயிரம் பீடி சுற்றினால் இவ்வளவு கூலி என்று கூலி நிர்ணயம் செய்து அவர்கள் எந்தயிடத்தில் இருந்துகொண்டு இந்தத் தொழிலைச் செய்தாலும் சரி என்று வைப்பதா எனபதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். எங்கிருந்து அவர்கள் தொழிலைச் செய்தாலும் அவர்களுக்கு நல்ல ஊதியம் கிடைக்க வேண்டுமென்று செய்வதா அல்லது பாக்டரி சட்டப்படியுள்ள சகல வசதிகளையும் அவர்கள் பாக்டரிகளில் இருந்து வேலை செய்தால்தான் கொடுக்க முடியுமா என்பதையும் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். பாக்டரியாக ஒரே இடத்தில் வைக்க வெண்டுமென்று கோதண்டராமன் அவர்கள் சொன்னார்கள். ஒரு வகையில் அது நல்லதாக இருந்தாலும்கூட அந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களே அதை ஒத்துக்கொள்ளாத முறையில் அபிப்பிராயம் தெரிவிக்கிறார்கள். காரணம், சிறு குடிசைத் தொழிலாக அது விளங்கக் கூடிய காரணத்தினால் வீடுகளில் இருக்கக்கூடிய பெண்களும், எட்டு, பத்து வயதுக் குழந்தைகளும் இத்தொழிலில் ஈடுபட்டிருப்பதால், பாக்டரியாக வைத்து ஒரேயிடத்தில் அவர்கள் வந்து வேலை செய்ய வேண்டுமென்று வைப்பதினால் சிரமம் ஏற்படும் என்று தொழிலாளர்களில் பலர் அபிப்பிராயப்படுகிறார்கள். வீடுகளில் வைத்து இத்தொழிலை செய்வதாக இருந்தால்தான் எங்களுக்குச் சௌகரியமாக இருக்கும் என்று பலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இன்று, சமூக அமைப்பிலே முஸ்லீம் பெண்கள், கோஷாக்கள், வெளியே போகக்

[Sri M. R. Kandaswami Mudaliyar] [12th September 1958

கூடாது என்றிருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு பழக்க வழக்கம் அவர்களிடம் இருந்து வருகிறபடியால், ஆண்களோடு பெண்கள் சரிநிகர் சமானமாக வந்து வேலை செய்வதற்குள்ள வாய்ப்பு அச்சமூகப் பெண்களுக்கு இல்லை. அந்த அளவு அச்சமுதாயம் இன்னும் முன்னேற்றம் அடையவில்லை. அந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் ஏழைகளாக இருப்பதால் வீடுகளில் இருந்து கொண்டே அவர்கள் இந்தத் தொழிலைச் செய்யலாம் என்று இருந்தால் அது அவர்களுக்கு ஓரளவு வசதியாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். அல்லது பெண்கள் செய்யக்கூடிய தொழில்களை வேண்டுமானால் வீடுகளில் வைத்துச் செய்துகொள்ளலாம் என்று வைத்துவிட்டு, ஆண்கள் தொழிற்சாலையில் வந்து வேலை செய்யவேண்டுமென்று வைத்துக்கொள்ளலாம். இதுபற்றி செலக்ட் கமிட்டியார் இருதரப்பட்ட அபிப்பிராயங்களை வாங்கி வைத்திருக்கிறார்கள். அவர்களின் கருத்து இதில் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். ஆகவே இது குறித்து நன்கு சிந்தித்துப் பார்த்து ஒரு முடிவிற்கு வர வேண்டும். செலக்ட் கமிட்டியார் பலயிடங்களையும் சுற்றிப் பார்த்து விட்டு, முதலாளிகளின் கருத்துக்களையும், தொழிலாளிகளின் கருத்துக்களையும் அறிந்து வந்திருக்கிறபடியால், அவர்களின் கருத்து, செலக்ட் கமிட்டியாரின் கருத்து இதில் முக்கியமாகப் பிரதிபலிப்பது மிகவும் நன்மை பயப்பதாக இருக்கும். அடுத்தபடியாக, முதலாளிகள் யார் என்பது நிர்ணயிக்கப்பட வேண்டும். அப்படி நிர்ணயிக்க முடியாதபடி இது இருக்கிறது. ஒரு முதலாளி ஆயிரக்கணக்கில் ரூபாய் போட்டு இந்தத் தொழிலிற்கு வேண்டிய புகையிலையை வாங்கிவைக்கிறார். ஏஜெண்ட்ஸ் வைத்து அதைப் பத்து பேர்களிடம் பிரித்துக் கொடுக்கிறார். அவர்கள் மேலும் பத்து பேர்களுக்கு, ஆள் ஒன்றுக்கு பத்து பேர் வீதம் பிரித்துக் கொடுக்கிறார்கள். இப்படி வரும்போது யாரை முதலாளி என்று சொல்வது ? ஆகவே, யார் முதலீடுசெய்து சரக்குகளை வாங்கி வைத்து அதை விற்று லாபம் அடைகிறார்களோ அவர்களைத்தான் முதலாளிகள் என்று கருத முடியுமே தவிர விநியோகஸ்தர்களாக இருக்கிறார்களே அவர்களை முதலாளிகள் என்று சொல்ல முடியாது.

12 noon நண்பர் மாதா கவுடர் அவர்கள் சொன்னது மாதிரி ஏஜெண்ட் ஒருவர், 1,000 ராத்தல் பீடி புகையிலையை மாத்திரம் கொடுத்துவிட்டால் அவருடைய வேலை அதோடு தீர்ந்துவிட்டது என்று முடிவு கட்டிக்கொண்டு போனால் தொழிலாளிக்கு, அவருக்கு கடைசியில் ஒருவிதமான லாபமும் கிடைக்காமல் போகும். ஏஜண்டுகளுக்கு அவர்கள் கையில் இருக்கக்கூடிய சரக்குத்தான் மிஞ்சும். ஆகவே தொழிலாளிக்கு லாபத்தில் ஒரு பங்கு போனஸ் கொடுக்கவேண்டும் என்ற முறை ஏற்படுத்தினால் அந்த முதலாளி தனக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லிவிடுவார். ஆகவே இவர்களுக்கு நிரந்தரமாக ஒரு பரிகாரத்தைத் தேடவேண்டும் என்று அமைச்சர் அவர்களிடம் கேட்டுக் கொள்கிறேன். அதோடு இந்தத் தொழில் நடத்திக்கொண்டிருக்கிறவர்கள் குறைந்த கூலியைக் கொடுத்து நிறைய லாபம் அடைந்து வருகிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இவ்விதம் லாபம் அடைந்து கொண்டிருக்கின்ற முதலாளிகள் தாங்களாகவே தொழிலாளர்களின் நன்மையைக் கருதி, காலத்தின் முன்னேற்றத்திற்கேற்ப தங்களுடைய மனதை மாற்றிக்கொள்ள வேண்டும். சில இடங்களில் இந்தத் தொழில் மூலமாக தொழிலாளர்களை நசுக்கக்கூடிய அளவுக்கு நடத்தி வருகிறார்கள். எல்லா முதலாளிகளும் இவ்விதம் செய்கிறார்கள் என்று நான் சொல்ல வரவில்லை. சிலர் தாராளமாக இருக்கலாம், இன்னும் பழைய போக்கிலே இருக்கக் கூடிய முதலாளிகள் காலப்போக்கை உணர்ந்து தாங்களாகவே தங்கள் கொள்கையை மாற்றிக்கொள்ளவேண்டும். இன்றைக்குச் சேலத்தை எடுத்துக்கொண்டு பார்த்தால் அங்கு பீடித் தொழிலாளர்கள் பலர் கிளர்ச்சி செய்ததின் காரணமாக 100, 150 பேர்கள் வேலையில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் அவர்கள் தொழிலற்ற முறையில், கஷ்டப்பட்டுக்கொண்டு பட்டினி கிடக்கின்ற நிலைமையை நாம் பார்க்கிறோம். இந்த நிலைமை மாறவேண்டும் என்று சொன்னால் இந்தத் தொழிலில் பற்றிருக்கின்ற தொழிலாளர்களுக்கு நிரந்திரமாக வேலை நிர்ணயம் ஏற்படவேண்டும். அப்போதுதான் இந்தக் கஷ்டங்களுக்கு எல்லாம் ஒரு

ஆறுதலாக இருக்கும். சட்டத்தைச் செய்வதினால் உடனே எல்லாக் கஷ்டங்களும் தீர்ந்துவிடாது. சட்டம் செய்து நடைமுறைக்குக் கொண்டுவரும்போது பலவிதமான தவறுகள் ஏற்படலாம். அவ்விதம் நடைமுறைக்குக் கொண்டுவரும்போது ஏற்படுகிற பல தவறுகளைப் பார்த்து அதைத் சீர்திருத்தம் செய்யவேண்டும். அதல்லாமல் நினைத்த உடனேயே எல்லாவற்றையும் திருத்திவிட முடியாது. அந்த அளவில் தொழிலாளர்களுக்கு நிரந்தரமாகக் கூலி வேண்டும் என்பதை நாம் இதன் மூலமாகக் கொண்டு வரலாம். இன்னும் பல பிரச்னைகள் இதன் மூலமாக எழக்கூடும். அவைகளை எல்லாம் அந்தந்தச் சமயங்களில் திருத்திக்கொள்ளலாம். மேலும் நம் ராஜ்யத்தைப் பொறுத்தவரையிலும்தான இந்தச் சட்டம் செல்லுபடியாகும், மற்ற அண்டை ராஜ்யங்களில் பீடி சுற்றுவதற்குக் கூலி குறைவாக இருந்தால் அடுத்த ராஜ்யங்களிலிருந்து பீடிகளைக் சுற்றிக் கொண்டு வருவதற்கு முயற்சிப்பார்கள். இதைப்பற்றியும் நாம் ஆலோசனை செய்ய வேண்டும். அதோடு இத்தனை மாத காலம் வேலை செய்திருந்தால் அவர்களை வேலையிலிருந்து நீக்கக்கூடாது, என்று வரையறுக்கவேண்டும். அதைப் பற்றியும் ஆலோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri V. S. MANICKASUNDARAM :** தலைவர் அவர்களே, இந்த பீடித் தொழிலாளர் மசோதாவின் மீது என்னுடைய கருத்துக்களைக் கூறுவதற்கு அனுமதி தந்ததற்கு என்னுடைய நன்றியை முதலில் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த பீடி மசோதா செலக்ட் கமிட்டியில் முன்பு இருந்தபோது, நான் திருச்சிராப்பள்ளியில் போய் இந்த செலக்ட் கமிட்டியில் முன்பு சாட்சியம் அளித்திருக்கிறேன். அதில் நான் குறிப்பிட்ட விவரங்களையும் கவனித்து அதற்கு வேண்டிய பரிகாரங்களை இதில் சேர்த்து அமைக்கவேண்டும் என்று அரசாங்கத்தாரைப் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன். இந்த பீடித் தொழிலில் நான் கவனித்த வரையில் சில காரியங்களை என்னால் உறுதியாக்கிக் கொள்ள முடிந்தது. அவைகளை அனுசரித்துச் சட்டம் இருக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய வேண்டுகோள். முதலாவதாக இந்தத் தொழில் குறிப்பிட்ட சில பேர்கள் கையில்தான் அடங்கி இருக்கிறது. அவர்களைத் தவிர வேறு யாராவது இந்தத் தொழிலை ஆரம்பிக்கவேண்டும் என்று நினைத்தால் அதற்கு எவ்வளவோ யோசனை செய்கிறார்கள் என்று நான் கருதுகின்றேன். ஆகையினால் சில குறிப்பிட்ட குறைந்த எண்ணிக்கையுள்ளவர்களின் கையில் அடங்கியிருக்கும் இந்தத் தொழிலில் தலையிடும் முன்பு, இந்தத் தொழிலை கட்டுப்பாடாக நடத்த வேண்டும் என்று இந்த சட்டம் இயற்றப்பட்டிருப்பதால், இதைத் தவிர்க்கவேண்டும் அல்லது இந்த அசௌக்கியங்களிலிருந்து விடுபட வேண்டும், என்று எண்ணுகிறவர்கள் இந்தத் தொழிலை நடத்தாமல் விட்டு, அதன் மூலம் இந்தத் தொழில் பாதிக்கப்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது மிக அவசியம் என்பதை மட்டும் அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். எனக்கு முன்னால் சில நண்பர்கள் பேசியபோது சில ஊர்களில் இந்தச் சட்டத்தைச் சீக்கிரம் அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று கிளர்ச்சிகள் நடைபெற்று வருவதாகத் தெரிவித்தார்கள். அதேபோன்று ஒரு கிளர்ச்சி ஈரோட்டிலும் ஏற்பட்டது, அப்போது அந்தத் தொழிலாளர்கள் மத்தியில் நான் சென்று அவர்களைச் சந்தித்து அரசாங்கம் எவ்வளவு சீக்கிரத்தில் இந்தச் சட்டத்தை கொண்டு வரவேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களோ, அதே எண்ணத்தோடு தான் அரசாங்கமும் இருந்து கொண்டிருக்கிறது, கூடிய சீக்கிரத்திலேயே இந்தச் சட்டம் கொண்டுவரப்படும் என்று அவர்களுக்கு உறுதி யளித்து அப்படி ஏதாவது அரசாங்கத்தினிடத்தில் ஏதாவது தயக்கம் ஏற்படுமானால் இதற்காக உங்கள் சார்பில் நின்று அரசாங்கத்திற்கு எடுத்துக் சொல்கிறேன் என்று சொல்லி அந்த வேலை நிறுத்தத்தைத் தவிர்த்து இருக்கிறேன். அந்தக் கடமையிலிருந்து என்னை விடுவித்ததற்காக இந்த அரசாங்கத்திற்கும் அமைச்சர் அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். இந்த வார்த்தையைச் சொல்லும்போது அரசாங்கம் இப்போது கொடுத்திருக்கும் திருத்தப் பிரேரணையைக் காணும்போது அரசாங்கத்திற்குச்

சில வேண்டுகோள் விடுக்கவேண்டியிருக்கிறது. அதாவது இதனுடைய ஷரத்துக்களையும் அரசாங்கம் எப்போது இவைகளை கொண்டு வருவதற்கு தகுதி, எப்போது ஏற்ற காலம் என்று கருதுகிறதோ அப்போது அரசாங்கம் கொண்டுவரும் என்கிற உரிமையை அரசாங்கம் எடுத்துக் கொள்கிறது. தொழிலில் முன்னேற்றத்திற்காகத்தான் இவ்விதம் அமைக்கப்பட்டிருக்கிறது என்று கருதுகிறேன். ஆனால் என்னுடைய அபிப்பிராயத்தில், முதலாளிகளைப் பொறுத்தவரையில் இன்று கட்டிட வசதி உடனேயே அளிக்கவேண்டும் என்று இருக்கும் பட்சத்தில் அனேகமாகப் பெரும் அளவில் கட்டிடம் இல்லாமல் கஷ்டப்பட வேண்டியிருக்கும் என்ற காரணத்தின்பேரில் அந்தக் காலத்தில் தொழிலாளர்கள் பாதிக்கப் படக்கூடிய நிலை ஏற்படும், அதோடு பல தொழிலாளர்கள் வேலையின்றி தவிக்க நேரிடும் என்ற காரணத்தால் இந்த ஷரத்தை மாத்திரம் அரசாங்கம் எப்போது உசிதம் என்று கருதுகின்றதோ அப்போது கொண்டு வரலாம். ஆகவே இந்த ஷரத்தை மாத்திரம் இவ்விதம் நிறுத்தி வைத்து விட்டு மற்ற சுகாதார முறையில் வசதி செய்து கொடுக்கவேண்டியது, இண்டஸ்ட்ரியல் டிஸ்பூட் ஆக்ட் முதலியவைகளைக் கொண்டு வருவது, முதலியவைகளை அமுல் நடத்துவதற்கு வற்புறுத்தவேண்டும், அதற்கான ஷரத்துகளை உடனேயே கொண்டு வரவேண்டும் என்று அரசாங்கத்தைப் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன். இன்று இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதின் முக்கியமான நோக்கம் அவர்களுக்கு நிரந்தரமாக ஒரு பாதுகாப்பு கிடைக்கவேண்டும் என்பதுதான். இதற்கு முன்னால் இந்தத் தொழில் நடத்தி வருகின்ற முதலாளிகள் பாக்டரி ஆக்ட், இண்டஸ்ட்ரியல் டிஸ்பூட் ஆக்ட், லேபர் ஆக்ட் முதலியவைகளிலிருந்து எப்படியாவது தப்பித்துக் கொள்கிறார்கள். ஆகவே இந்தச் சட்டத்தையும் அவர்கள் தோற்கடித்து விடாமல் பார்த்துக்கொள்ளவேண்டியது அரசாங்கத்தின் கடமை என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுடைய நிலைமை என்ன என்பதை நான் நேரில் சென்று பார்த்திருக்கிறேன். இந்தத் தொழிலில் இருக்கின்ற ஒரு நிலைமை என்னவென்றால், 15-வது வயதில் ஒருவன் இந்தத் தொழிலில் ஈடுபட்டால் அதே நபர் தொடர்ந்தாற்போல் 15 வருடங்களுக்கு மேல் வேலை செய்ய முடிவதில்லை. நான் 10, 12 பாக்டரிகளைப் பார்த்தபோது அவைகளில் 35 அல்லது 40 வயதுக்கு மேற்பட்ட தொழிலாளர்களையே அங்கு பார்க்க முடியவில்லை. இதைப்பற்றி தொழிலாளர்களிடத்தில் கேட்டபோது இந்த தொழிலில் ஈடுபட்டு கொண்டிருக்கிறவர்கள் பெரும்பாலும் பெரும் வியாதிகளால் பாதிக்கப்படுகிறார்கள் என்று தெரிவித்தார்கள். அதோடு க்ஷய ரோகம், பைல்ஸ் போன்ற நோய்கள் வருகின்றன, 10, 12 வருடங்கள் தொடர்ந்தாற்போல் இந்த தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்குக் கண்பார்வை கெட்டுப் போய்விடுகிறது, அதன் பின்னால் இவர்களுக்கு அந்த தொழிலில் ஈடுபடுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விடுகிறது, ஆகவே இவர்களுக்குக் குறுகிய காலத்திலேயே ஆயுட்காலம் வரைக்கும் ஊதியம் கிடைப்பதற்கு அரசாங்கம் ஒரு ஏற்பாட்டைச் செய்யவேண்டும் என்று என்னிடம் அந்த
12-10 p.m. தொழிலாளர்கள் தெரிவித்தார்கள். நான் அது உண்மை என்றுதான் கருதுகிறேன். அந்தக் கோரிக்கை நியாயம் என்றுதான் கருதுகிறேன். அதோடு 10 வருஷங்களுக்கு முன்பே, பாக்டரி ஆக்டின் கீழ் இந்தத் தொழிலைக் கொண்டு வரவேண்டுமென்று முயற்சித்தபோது அந்த முதலாளிகள் அந்தச் சட்டங்களினின்று விடுதலை அடைந்துள்ளதன் காரணத்தினால் இன்னும் ஏதாவது கோளாறுகள் கண்டுபிடித்து இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்தாலும் அவர்கள் இதனின்றும் விடுபடாமல் இருக்கவேண்டும். அதிலும் முக்கியமாக அந்தத் தொழிலாளர்களுடைய சுகாதாரத்தைப் பொறுத்த அளவிலும், சம்பளத்தைப் பொறுத்த அளவிலும் உடனடியாக இந்த ஷரத்துக்களை அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்று நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

முக்கியமாக பாக்டரி ஆக்டிலிருந்து இவ்வளவு காலமாக முதலாளிகள் தப்பித்துக் கொண்டு வந்ததன் காரணம், வேலை செய்யக்கூடிய இடம் பாக்டரியாக இல்லாததாலும், தாங்கள் முதலாளிகள் இல்லையென்று

12th September 1958] [Sri V. S. Manickasundaram]

எடுத்துக் காட்டியும்தான் இதிலிருந்து தப்பித்து வந்திருக்கிறார்கள். இந்தச் சட்டத்தின் பிரிவு 2 (ஜி)-யில் முதலாளிகளைப் பற்றிக் குறிப்பிடும் போது யார் முதலாளிகள் என்று சரியாக இல்லாத குறையைத் திருத்தத் தான் சட்டம் இயற்ற முன் வந்திருக்கிறோம். இந்தப் பிரிவு (ஜி)-யைப் பொறுத்த வரையில் ஒரு திருத்தத்தை அமைச்சர் அவர்களுடைய கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அதிலே, முதலாளிகள் யார் என் பதிலே "அல்டிமேட் கண்ட்ரோல்" என்ற வாசகம் இருக்கிறது. இதைப் பார்த்தவுடனே, வேறு விதமான "கண்ட்ரோல்" செய்பவர்களின் நிலைமை என்ன என்று கிளப்பக்கூடும் என்று பயப்படுகிறேன். "கண்ட்ரோல்" வைத்திருப்பவர்கள் எல்லோரும் முதலாளிகள் என்று "அல்டிமேட்" என்ற வாசகத்தை விட்டுவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்கு ஆதரவாக மினிமம் வேஜஸ் ஆக்டிலே, எம்ப்ளாயர் என்ற வார்த் தையின் விளக்கத்திலே "கண்ட்ரோல்" என்ற வார்த்தையை மட்டும் உபயோகித்துக் கொண்டு "அல்டிமேட்" என்ற வார்த்தையை உபயோ கிக்காமல் இருக்கிறார்கள். யார் சம்பளம் கொடுக்கிறார்களோ, யார் சூபர் வைஸராக இருக்கிறார்களோ அவர்களெல்லாம் எம்ப்ளாயர் என்று அதிலேயிருக்கிறது. அந்த முறையிலே இந்தச் சட்டத்தையும் அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தப்படியாக நான் சாட்சி சொல்லும்போது 20-வது பிரிவில் கண்டபடி அடுத்த 3 நாட்களுக்குள் விடுமுறை விடவேண்டுமென்ற ஷரத் தை நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். என்னுடைய சாட்சியத் தை ஏற்றுக்கொண்டு, அதை நீக்கியதற்காக நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். 16-வது ஷரத்திலிருந்து 21-வது ஷரத்து வரையில் உள்ள ஷரத்துக்களின் மீது முதலாளிகள் சார்பில் சில யோசனைகளையும், தொழி லாளிகளின் சார்பில் சில யோசனைகளையும் சொல்ல ஆசைப்படுகிறேன். முதலாளிகள் சார்பில் சொல்ல விரும்புவது, குறைந்த பட்ச சம்பளம் நிர்ணயம் செய்த உடனே, தொழிலாளிகள் சம்பளத்தை வாங்கிக்கொண்டு 1,000 பீடிகளைச் சுற்றுவதற்குப் பதிலாக 500 பீடிகள் சுற்றினால், அவர்கள் மீது என்ன கட்டுப்பாடு வைத்திருக்கிறீர்கள் என்று முதலாளிகள் கேட் கிறார்கள். நான் பார்த்த அளவில் அந்த மாதிரி ஒரு கட்டுப்பாடு இருப்ப தாகத் தெரியவில்லை. அவர்களுடைய கோரிக்கை நியாயம் என்றுதான் நான் கருதுகிறேன். ஓரளவு ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டியது அவசியம் என்பது என்னுடைய அபிப்பிராயம். அதற்காக பேமெண்ட் ஆப் வேஜெஸ் ஆக்டின் 7-வது பிரிவை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். சில சந்தர்ப்பங்களில் சம்பளத்தைக் குறைத்துக் கொடுக்க வகை செய்யப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் தொழிலாளிகள் பயப்படுவது, "வேலை கொடுத்தால் தானே சம்பளம் கிடைக்கும், 400, 500 பீடிகளைச் சுற்றுவதற்கான தழைகளையும் பொருள்களையும் கொடுத்து, அதற்குத் தகுந்த ஊதியம் கொடுத்தால் என்ன செய்வது" என்பது. ஒரு தொழிலாளி வேலை செய்யத் தயாராக இருக்கும் பட்சத்தில், அவ னுக்கு நாள் கூலி கிடைக்கவேண்டும் என்று இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பேமெண்ட் ஆப் வேஜெஸ் ஆக்டைப் பொறுத்த வரையில் அந்த மாதிரி இருக்கிறது என்று நினைக்கிறேன். அந்த மாதிரி இதில் தேவை என்று கருதினால் அதையும் சேர்த்துக் கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

முதலாளிகளைப் பொறுத்த வரையில் ஜெயிலுக்கு அனுப்பலாம் என்ற ஷரத்தை நீக்கி அபராதத்தோடு மட்டும் நிறுத்திக்கொள்வது நல்லது என்று கருதுகிறேன். அதையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட் டுக் கொள்கிறேன்.

*SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டம் நீண்ட நெடு நாட்களாக எதிர்பார்க்கப்பட்ட ஒரு சட்டம். இதை வரவேற்கும்போது கூட பல நண்பர்கள் எந்த முறை யிலே செயல்பாட்டுக்கு வரும் என்று ஐயப்பட்டார்கள். இதிலே பல

நன்மைகள் பயக்கக்கூடிய ஷரத்துக்கள் உள்ளன. ஆனால் குறிப்பாக இதைப்போலவேயுள்ள சுருட்டுத் தொழிலுக்கு இந்தச் சட்டம் அமுலாகாது என்று தோன்றுகிறது. அவர்களும் கிட்டத் தட்ட இதே நிலைமையில் தான் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு சட்டம் உடனடியாக வரும் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

இந்தச் சட்டத்தினால் அடிப்படையாகக் கிடைக்கக் கூடிய நன்மைகள் மாதாமாதம் சம்பளம் கிடைப்பதும், சுகாதார இடத்தில் வேலை செய்வதும், குடி தண்ணீர், கக்கூஸ் வசதிகள், பெண் தொழிலாளிகள் வேலை செய்யும் இடங்களில் அவர்களுடைய குழந்தைகளுக்குத் தொட்டில் வசதிகள் வருடாந்திர லீவு முதலியன கிடைப்பதும் ஆகும். ஆனால் இந்தச் சட்டத்தை அமுல் நடத்துவதிலே பல சிக்கல்கள் வரும் என்று பல நண்பர்கள் குறிப்பிட்டார்கள். அதையே நானும் வலியுறுத்திக் கூற அவாவுறுகிறேன். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும் போது கவனமாக ஆனால் தயக்கமில்லாமல் அமுலுக்குக் கொண்டு வர முயற்சிக்க வேண்டும். அப்படியில்லையானால் ஒரு சில இடங்களில் முதலாளிகளால் பல்லாயிரக் கணக்கான தொழிலாளிகளை வேலையில்லாத் திண்டாட்டத்தில் ஆழ்த்திவிட்டு குழப்பங்கள் உண்டாக்க நேரிடும். சில முதலாளிகள் நல்ல கண்ணோட்டத்தோடு—இந்தச் சபையிலே எதிர் கட்சியிலும், ஆளும் கட்சியிலும் சில பீடித் தொழில் முதலாளிகள் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்—தங்களுடைய ஒத்துழைப்பைக் கொடுக்கலாம். ஆனால் எல்லோருமல்ல.

SRI M. R. KANDASWAMI MUDALIAR : யார் அந்த முதலாளிகள் ?

*SRI K. SATTANATHA KARAYALAR : இந்த சபையிலேயுள்ள கனம் அங்கத்தினர் அதிமூலம் அவர்கள் ஒரு முதலாளி என்று குறிப்பிட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

MR. SPEAKER : Why does the hon. Member bring in his name into this discussion ?

SRI K. SATTANATHA KARAYALAR : யார் என்று கேட்டார்கள், அதற்காகச் சொன்னேன். நல்ல மனது படைத்த முதலாளிகள் ஒத்துழைப்பு இருக்கும். இருப்பினும் பல முதலாளிகள் மசோதாவின் ஷரத்துக்களிலிருந்து எப்படியும் தப்பித்துக்கொண்டு விடவேண்டும் என்று வேலை செய்பவர்களும் இருக்கிறார்கள். சுப்ரீம் கோர்ட் வரை கொண்டு செல்வோம் என்று மார்தட்டிக் கொள்பவர்களும் உண்டு. பல ஐயப்பாடுகள் அதனால்தான் ஏற்படுகிறது. கனம் அமைச்சர் அவர்கள் பேசும் போது ' எம்ப்ளாயர் ' என்ற வார்த்தையின் விளக்கத்தை சாங்கோபாங்கமாகக் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொன்னார்கள். முதலாளிகள், அவர்களுடைய ஏஜெண்டாக இருக்கக் கூடியவர்களைக் காட்டி விட்டுத் தான் தப்பித்துக்கொள்ள முடியாதபடி ' எம்ப்ளாயர் ' என்ற வார்த்தையின் விளக்கம் விரிவுபடுத்தப்பட்டிருக்கிறது, அத்துடன் மேலும் சில திருத்தங்கள் கொண்டு வரப் பட்டுள்ளது என்று சொன்னார்கள். அதே சமயத்தில் ' எம்ப்ளாயீ ' என்ற வார்த்தையின் விளக்கத்திற்கும் சில திருத்தங்கள் வேண்டுமோ என்று கருதுகிறேன். சமீபத்தில் வெளியான சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பிலே, சீப் ஜஸ்டிஸ் தலைமை வகித்த புல் பெஞ்ச், ' எம்ப்ளாயீ ' யாராக இருக்கவேண்டுமென்பதை

' On an application moved by such person under Article 226 of the Constitution it was contended that the definition of ' employee ' required that the person who is sought to be covered by the definition must be a person to whom ticket is issued by the company and whose name and ticket number are included in the departmental muster. Mere employment in the office would not

12th September 1958] [Sri K. Sattanatha Karayalar]

suffice for bringing that person within the definition of 'employee'.' என்று குறிப்பிட்டுள்ளது. இதே போன்று வேறொரு தீர்ப்பையும் உற்று நோக்கிப் பார்ப்போமேயானால், 'master and servant" என்ற contractual relation இருந்தால் மட்டும் தான் "employer, employee' என்று கொண்டு வரமுடியுமென்று தீர்ப்புக் கூறுகிறது. அந்த அடிப்படையிலே பார்க்கும்பொழுது 'contract for service' என்று இருந்தால் அதற்கு 'no master and servant relation' என்று தீர்ப்பு சொல்லுகிறது. ஆனால் 'contract of service' என்று இருந்தால் "master and servant relation' இருக்குமென்று தீர்ப்பில் இருக்கிறது. இந்த முறையில் இந்த definition-ஐ திருத்தி, 12-30 p.m.

'Employee' means a person employed in the beedi industry either directly under the employer on contract of service or under any agency on contract for service'

என்று திருத்தியமைத்தால் நன்மையாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். எப்படியும் "employer, employee" என்ற definition-ஐ அடிப்படையாக வைத்து, இதிலிருந்து முதலாளிகள் தப்பித்துக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் அளிக்காத முறையில் சட்ட நிபுணர்களுடன் கலந்து ஒரு சரியான திருத்தத்தைச் செய்யவேண்டும்.

மேலும், லைசென்சு கொடுக்கும்பொழுது குறிப்பிட்ட ஏஜெண்டுகளைப் பினாமியாக வைத்துக்கொண்டு, அவர்கள் பேருக்கு லைசென்சு பெற்று இந்தச் சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சி செய்வார்கள். ஆகவே லைசென்சைக் குறிப்பிட்ட முதலாளிக்குத்தான் கொடுக்கலாம் என்ற விதியைக் கொண்டு வருவோமேயானால் நன்றாக இருக்கும். ஆனால் இது அரசியல் சட்டத்திற்கு முரணாக இருக்கும் என்று விவாதிக்கப்படுகிறது. இதையும் பரிசீலனை செய்து நேரடியாக ஓனருக்கு முதலாளிகளுக்குத் தான் லைசென்சு கொடுக்க வேண்டும் என்று செய்தால் நலமாக இருக்கும். இப்படிச் செய்யவில்லை என்றால், பல இடங்களில் ஏஜெண்டுகளாக இருக்கக் கூடியவர்கள் பேரில் லைசென்சை வாங்கிக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட டிரேடு மார்க் உள்ளவர்களுக்கென்று சப்ளை செய்யாமல் பலருக்கும் சப்ளை செய்கிறோம் என்று சொல்லக்கூடிய நிலைமை ஏற்படலாம். இப்பொழுதும் சில இடங்களிலே பலதரப்பட்ட ரீதியில் இந்தத் தொழில் நடத்தப்பட்டு வருகிறது. கன்னியாகுமரி ஜில்லாவை எடுத்துக்கொண்டால், கடைக்குக் கடை பீடி சுற்றக்கூடிய முறையில் நடத்தப்பட்டு வருகிறது. எந்த முறையில் செய்யவேண்டுமென்பதற்கு "premises"-ஐ மாத்திரம் நிர்ணயம் செய்கிறோம். எத்தனை ஆட்கள் இருக்க வேண்டும், எந்த முறையில் ஆட்களை வைத்து வேலை செய்ய வேண்டும் என்பதையும் நாம் இதில் சேர்க்க வேண்டும். இப்படிச் செய்யவில்லை என்றால், சிறிய இடங்களில், அதிகபட்சத் தொழிலாளிகள் இல்லை என்ற அடிப்படையில் வைத்துக் கொண்டு, வேலை செய்வதற்கு இடம் கிடைக்காத தனிப்பட்ட ஏஜெண்டுகள், 'நாங்கள் ஒரு முதலாளிக்காக செய்யவில்லை, பல முதலாளிகளுக்காகச் செய்கிறோம், ஒரு குறிப்பிட்ட டிரேடு மார்க் உற்பத்தி செய்யவில்லை, பலதரப்பட்ட டிரேடு மார்க்குகளை உற்பத்தி செய்கிறோம்' என்று எல்லாம் சொல்லக்கூடும். L-2, L-4, L-5 என்று மத்திய சர்க்காரால் வழங்கக்கூடிய லைசென்சுகளுக்கு சில நிபந்தனைகளையும், கட்டுப்பாட்டையும் விதிக்கவேண்டியிருக்கும் என்று தோன்றுகிறது. ஆகவே, மத்திய சர்க்காரோடு கலந்து, இதைப் பரிசீலனை செய்து, நல்ல முறையில் இதைச்சீர் செய்யவேண்டுமென்று கோருகிறேன்.

இந்தச் சட்டத்தைப் பொதுப்படையாக வரவேற்கின்ற முறையில், தொழிலாளி—முதலாளி, இருவருக்கும் உள்ள உறவு சுமுகமான முறையில் நிரந்தரமாக இருக்க வேண்டுமானால் குறைந்த பட்ச சம்பளத்தை நிர்ணயித்து, அதை உடனே அமலுக்குக் கொண்டு வரவேண்டும். இதற்காக ஏற்கெனவே நியமிக்கப்பட்டுள்ள கமிட்டியானது அதன் ரிப்போர்ட்டைக் கூடிய சீக்கிரம் சமர்ப்பிக்குமேயானால் நலமாக இருக்கும். சில தொழி

லாளிகளே இந்தச் சட்டத்திற்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஏனென்றால் இந்தச் சட்டத்தினால் நேரடியாகப் பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இல்லை. கோஷா முறையை அனுசரிக்கும் பெண்கள், வயது வந்த பெண்கள், இந்தத் தொழிலிலே ஈடுபட்டிருக்கிறார்கள். இந்தச் சட்டம் வந்தால் அவர்களுக்கு எல்லாம் வேலையில்லாமல் போய்விடும் என்ற அச்சத்தை உண்டுபண்ணி வருகிறார்கள். தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்குத் தகுந்த சம்பளம் கிடைக்குமென்ற நம்பிக்கை இருக்குமேயானால், தொழிலாளிகளின் ஒன்றுபட்ட ஒற்றுமையை நாம் பெறமுடியும். ஆகவே பீடித்தொழிலாளருக்குக் குறைந்த பட்ச சம்பளத்தை நிர்ணயித்து, அதை உடனடியாக அமல் நடத்துவதற்கான ஏற்பாடு செய்யச் சர்க்கார் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இந்த ' **spread over** ' நேரமானது 10 மணிக்குப் பதிலாக $10\frac{1}{2}$ மணியாக இருக்குமேயானால், ஓவர் டைம் ஒரு மணி நேரம் வேலை செய்யவேண்டுமானால் அதற்குத் தகுந்த சந்தர்ப்பம் கிடைக்குமென்று கருதுகிறேன். பாக்டரி சட்டத்திலும் அப்படித்தான் இருக்கிறது என்று நினைக்கிறேன்.

வார விடுமுறையைப் பொறுத்த வரையில் அதிலே சந்தேகத்திற்கு இடமிருப்பதாகத் தோன்றுகிறது. ' **beedi wrapping** ' என்பதற்கு மாத்திரம் தொழிற்சாலையைத் திறந்து வைக்கலாம் என்று தெளிவாக உரைப்பது நலமாக இருக்குமென்று கருதுகிறேன்.

இந்தச் சட்டத்தை அமல் நடத்துவதற்குக் குறிப்பிட்ட இன்ஸ்பெக்டர்கள் மாத்திரம் நடவடிக்கை எடுக்கலாமென்று இருக்கிறது. இந்தச் சட்டத்தை அமல் நடத்தாமல் மீறி நடப்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்க கோர்ட்டுக்கு கோரும் உள்ள அதிகாரம் டிரேடு யூனியனுக்கும் இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக, விதி விலக்கிற்கு அதிகாரம் கொடுக்கும் பிரிவு அவசியமா என்பதைப் புனராலோசிக்க வேண்டும். எந்த வட்டாரத்தில் இருக்கும் பீடிக் கம்பெனிக்கும் விதிவிலக்கு அளிப்பது என்பது சரியாக இருக்க முடியாது. திட்டவட்டமான காலவரையறுத்து இந்த விதிகளை அமலுக்குக் கொண்டுவரவேண்டுமென்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

ஆகவே, இந்தச் சட்டத்திலே செய்யவேண்டிய முக்கியமான மாறுதல்களைச் செய்து நல்ல முறையில் இந்தச் சட்டத்தை அமைப்பார்கள் என்ற அவாவோடு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri M. P. SARATHI** : கனம் சபாநாயகர் அவர்களே, பீடித் தொழிலாளரின் நிலையை உயர்த்துவதற்காகக் கொண்டுவரப்பட்ட இந்தச் சட்டத்தை முழுமனதோடு வரவேற்கிறேன். குறிப்பாக, பீடித் தொழிலாளர்கள் வேலை செய்யக்கூடிய நிலவரங்களை நேரில் சென்று பார்த்த எங்களுக்கே மனதிற்கு வேதனையாக இருந்தது. ஏனென்றால் சிறுசிறு குடிசைகளிலும், சுகாதார வசதியற்ற இடங்களிலும், இன்னும் ரோடுகள், கால்வாய்கள் போன்ற இடங்களிலும் அவர்கள் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த நிலவரங்களைச் சீர்திருத்தி அமைத்து, இப்பொழுது ஒரு ஆள் உட்காருவதற்கு 150 கன அடி இடம் இருக்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இது எவ்வளவோ தொழிலாளர்களுக்கு நன்மையாக இருக்கும் என்பதை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஆனால் அதேசமயத்தில் இப்பொழுது இருக்கும் நிலைமையைப் பார்த்தால், ஏதோ பிரான்ஞ்சு முறை, காண்டிராக்ட் முறை, ஏஜென்ஸி முறை என்று இம்மாதிரி எல்லாம் வைத்துக்கொண்டு முதலாளிகள் இதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கு முயற்சி செய்கிறார்கள். இதே முறைகளைத் தொடர்ந்து செய்து கொள்ளக்கூடிய முறையில் இந்தச் சட்டம் அமைந்திருக்கிறது. இப்பொழுது பொறுக்குக் கமிட்டி செய்திருக்கும் சில

திருத்தங்களினால் அவர்களுக்குப் பாதுகாப்பு ஏற்படுமென்று நினைக்கிறேன். எந்த ஒரு முதலாளி குற்றம் செய்தாலும், இதுவரையிலும் எந்தச் சட்டத்தினபடியும் அவர் தண்டிக்கப்படவில்லை என்பதையும் நான் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தொழில் கோர்ட்டுக்குச் சென்றால் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் சம்பந்தமில்லை என்ற தீர்ப்புத்தான் வழங்கப்படுகிறது. ஆகவே பீடித் தொழிலாளருக்கும், மற்ற தொழிலாளர்களுக்கும் ஒரு வித நன்மையும் ஏற்படவில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். இந்தச் சட்டம் அமலுக்கு வரும் தேதியிலிருந்து 14-வயதுள்ள சிறுவர்கள் எல்லாம் ஏராளமாக வேலையை இழப்பார்கள். அச் சிறுவர்கள் முன்னேற்றத்திற்காகத் தொழிற் கல்வி வசதியோ அல்லது அவர்கள் படிப்பதற்கான வசதியையோ செய்து கொடுப்பதற்கு வழிவகை செய்யவேண்டும். ஜில்லாவாரியாகப் பார்த்தால் 5,000 பேர்களுக்கு மேல் வேலையை இழப்பார்கள் என்று தோன்றுகிறது. இது சர்க்காருக்கும் தெரியும். அவர்கள் எந்த கதிக்குப் போனாலும் போகட்டும் என்று விட்டு விடாமல், அவர்களுக்கு நல்ல ஒரு வழியைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். திருநெல்வேலி ஜில்லாவை எடுத்துக் கொண்டால், ஏறத்தாழ 30,000 பெண்களுக்கு மேல் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிலையை உயர்த்துவதற்கு, பெண்களுக்காக ஒரு தனித் தொழிற்சாலையை அமைக்க வேண்டும். ஆண்களோடு உட்கார்ந்து கொண்டு அவர்கள் வேலை செய்ய முடியாது. நாங்கள் நேரில் சென்றபொழுது "எங்களுக்கு என்று தனியாக ஒரு பாக்டரி இருந்தால் தான் நாங்கள் வேலை செய்ய முடியுமே தவிர, அது இல்லாவிட்டால் நாங்கள் வேலை செய்வதை விட்டுவிட நேரிடும்" என்று அவர்கள் தெரிவித்தார்கள். இதைச் சர்க்கார் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

முக்கியமாக இந்த பீடித் தொழிலைப் பொறுத்தவரையிலும், கூலியாகத் 12 30 p.m. தான் நிர்ணயிக்க முடியுமே தவிர, சம்பளமாக நிர்ணயிப்பதற்குத் தோதில்லாத தொழில் இது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால், ஒரு தொழிலாளி ஒரு குறிப்பிட்ட நேரத்தில் 2,000 பீடிகள் சுற்றுவான். அதே நேரத்தில் மற்றொரு தொழிலாளி 500 பீடிகள் தான் சுற்றிக்கொண்டு உட்கார்ந்து இருப்பான். ஆகவே, இந்தத் தொழிலுக்குச் சம்பளமாக நிர்ணயிப்பதைவிட, கூலியாக நிர்ணயிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆனால், கூலியாக நிர்ணயிப்பதில் சில தொந்தரவுகள் இருப்பதாகக் கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். தினக் கூலியாக நிர்ணயித்தால், லீவு முதலிய வசதிகள் தொழிலாளிகளுக்கு இல்லாமல் போய்விடும் என்று குறிப்பிட்டார்கள்.

(Deputy Speaker in the Chair.)

கூலியாக நிர்ணயம் செய்து, அதே சமயத்தில் தொழிலாளிக்கு லீவு முதலிய வசதிகள் கிடைக்கும்படியாக இந்தச் சட்டத்தை மாற்றி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பீடித் தொழிலினுடைய நிலையை இந்தச் சட்டத்தின் மூலம் மாற்றுவிட்டால் பிராஞ்சு முதலாளிகள், ஏஜெண்டுகள் என்று சொல்லித் தப்பித்துக்கொண்டுவிடுவார்கள். முதலாளிகள் பதில் சொல்லத் தகுதியில்லாதவர்களை ஏஜெண்டாக நியமித்துவிட்டு ஏதாவது தப்பு செய்யும்பொழுது ஏஜெண்டுகள் மறைத்துவிடுவார்கள். அல்லது, அவர்கள் தப்பித்துக்கொள்ள வேறு வழி செய்துகொள்வார்கள். ஆகவே, யார் பேரில் டிரேட் மார்க் லைசென்ஸ் உள்ளதோ அவர்கள் தான் முதலாளிகளாகக் கருதப்படவேண்டும். மற்றப்படி பிராஞ்சுமுறை, காண்டிராக்ட் முறை, ஏஜெண்டு முறை இவைகளிலுள்ளவர்களை முதலாளிகளாகக் கருதாமல், டிரேட் மார்க் லைசென்ஸ் உள்ளவர்களையே முதலாளிகளாகக் கருதவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

குறிப்பாக, ஒரு தொழிலாளி வாரத்திற்கு 48 மணி நேரம் தான் வேலை செய்யலாம் என்றும், ஒரு நாளைக்கு 9 மணி நேரத்திற்கு மேல் வேலை செய்ய அனுமதிக்கக்கூடாது என்றும் இந்த மசோதாவில் கூறப்

பட்டிருக்கிறது. பெண்கள் இலையை வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய் வெட்டிக் கொண்டுவரலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பெண் களுக்கு இலை வெட்டத் தெரியவில்லை என்றாலோ, அல்லது வெட்டு வதற்காக ஆட்கள் இல்லை என்றாலோ அந்தத் தொழிலாளி 1,000 இலை வெட்டுவதற்கு 3 மணி நேரம், 4 மணி நேரம் வேலை செய்யவேண்டி யிருக்கும். அந்தத் தொழிலாளி ஒரு நாளுக்கு 1,000 பீடி சுற்றுவான் என்று வைத்துக்கொண்டால், இலை வெட்டுவதற்கு 4 மணி நேரமும், பீடி சுற்றுவதற்கு 8 மணி நேரமும் ஆக 1,000 பீடி சுற்றுவதற்குப் 12 மணி நேரம் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. ஆகையால் இந்த முறையை அமைச்சர் அவர்கள் திருத்துவார்களா என்று எதிர்பார்க்கி றேன்.

ஏறக்குறைய இப்பொழுது பாக்டரி ஆக்ட் அமுலில் இருந்துகொண்டு தான் வருகிறது. பாக்டரி ஆக்ட் முறைப்படி இப்பொழுது நடந்துகொண்டு வருகிறதா என்றால், இல்லவே இல்லை. இந்தச் சட்டத்தை இதே முறையில் கொண்டு வந்தால், இந்தச் சட்டம் வந்த பிறகும் கூட, தொழிலாளர் களுக்கு யாதொரு பயனும் ஏற்படாது. இதைக் கண்டிப்பான முறையில் அமுல் நடத்துவதற்குச் சர்க்கார் தகுந்த ஆபீஸர்களை நியமித்து உடனடி யாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். அப்படியில்லாமல் ஒரு வருஷம் இதற்கு அவகாசம் கொடுத்தால், அந்த ஒரு வருஷத்திற்குப் பிறகு இந்தச் சட்டத்தை அமுல் நடத்தவிடமாட்டார்கள். இதிலிருந்து தப்பித்துக்கொள்ள வேறு வசதிகளை ஏற்பாடு செய்துகொள்ளுவார்கள். அதுமட்டுமல்ல, இப்பொழுதே இந்தச் சட்டத்தை அமுலாக்க முடியாமல் செய்வதற்கு முதலாளிகள் " ஸ்டே ஆர்டர் " வாங்குவதற்கு யோசனை செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த வசதி ஏற்படாமல் செய்யவேண்டுமென்று சர்க்காரை கேட்டுக்கொள்ளுகிறேன். முக்கியமாக தொழிலாளி . . . .

**DEPUTY SPEAKER : Hon. Member's time is up.**

* **SRI N. MARUDACHALAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, முதலிலே இந்தப் பீடித் தொழிலாளர்கள் சட்டத்தைக் கொண்டுவந்திருக் கும் கனம் தொழில் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். அதே சமயத் தில், இம்மாதிரி சட்டத்தை மட்டும் கொண்டுவந்தால் போதாது, சட்டத் திலுள்ள பலனைப் பீடித்தொழிலாளர்கள் அனுபவிக்கும் முறையில், இந்தச் சட்டத்தில் சில திருத்தங்களைச் செய்யவேண்டும். 1950-ம் வருஷத்தில் ஒரு தொழில் சட்டம் வந்தபொழுது கோயம்புத்தூரில் பீடி முதலாளி களுக்கும், தொழிலாளிகளுக்கும் ஏற்பட்ட சச்சரவு நம் தொழில் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். இந்தத் தொழில் சட்டம் வந்த பிறகு அங் குள்ள பீடித் தொழிலாளர்கள் ரூ. 1, 1–8–0, 1–12–0-க்கு வேலை செய்தார்கள். அந்தச் சட்டம் வந்த பிற்பாடு அவர்களுக்குப் போனஸ் கிடைத்து முதலாளிகள் இதையெல்லாம் பார்த்து ஒரே இடத்தில் முதலைப் போட்டு தொழிற்சாலை வைத்தால் நகரத்திலுள்ளவர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டியிருக்கும் என்று எண்ணி, வேலையில்லா திண்டாட்டத்தினால் அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் கிராம ஜனங்களுக்கு சிறிது சிறிதாக பிரித்துக்கொடுத்து வேலை வாங்கி, அவர்களுக்குக் குறைந்த கூலியைக் கொடுத்து, அதிக லாபம் பெறுகிறார்கள். இம்முறையைக் கையாண்டு தொழிலைப் பல பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். இதைத் தடுத்து நிறுத்தினாலொழிய முதலாளிகளைத் தடைசெய்ய முடியாது. அதோடு கூட, இன்று முதலாளி, தொழிலாளிகளுக்கிடையே சச்சரவுகள் ஏற்பட்டால், தொழிலாளிகளுக்கு என்னென்ன நிபந்தனைகள் விதிக்கப்படுகின்றனவோ, அதே நிபந்தனைகளை முதலாளிகளுக்கும் விதிக்க வேண்டும். முதலாளிக்கு ஒரு நிபந்தனையும், தொழிலாளிக்கு ஒரு நிபந்தனையும் இருக்கக்கூடாது. அதோடுகூட, இரவில் வேலை செய்யும் தொழிலாளிக்கு $1\frac{1}{2}$ மடங்கு கூலி கொடுக்க வேண்டும். இதை ஓவர் டைம் கூலி என்று சொல்லுவார்கள். அதாவது பகலில் வேலை செய்தால் எவ்வளவு கூலி கிடைக்குமோ அதை

12th September 1958] [Sri N. Marudachalam]

விட அதிகப்படியான கூலி கொடுக்கவேண்டும். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தாமல் தடுப்பதற்கு முதலாளிகள் ஒன்று சேர்ந்து கொண்டு பல சூழ்ச்சிகளைக் கையாளலாம். கூலி நிர்ணயச் சட்டம் வந்தபொழுது அதை எதிர்த்து முதலாளிகள் ஹைகோர்ட்டு வரையிலும் போய் முறையிட்டார்கள். தொழிலாளிகளுக்குச் சாதகமாக இந்தச் சட்டத்தைத் திருத்தி, தொழிலாளிகளுக்கு நன்மை பயக்கும்படி செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தச் சட்டத்திலுள்ள குறைபாடுகளைத் திருத்தி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இதைக் கொண்டுவந்த தொழில் அமைச்சர் அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

* SRI D. S. AUTHIMOOLAM : மிஸ்டர் டெப்யூடி ஸ்பீக்கர், ஸார், இந்தப் பீடித் தொழிலை ஒழுங்குபடுத்தும் மசோதாவை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். நான் ஒரு சிறிய பீடி உற்பத்தியாளர் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்தச் சட்டத்தை நான் ஏன் வரவேற்கிறேன் என்று சொன்னால், என்னுடைய தொகுதியிலுள்ள வாக்காளர்களாக இருக்கும் 30,000 பீடித் தொழிலாளர்களுடைய வோட்டுகளை இன்னொரு தடவை பெற்றுக் கொள்ளலாம் என்ற அடிப்படை நோக்கத்தோடு அல்ல, அவர்களுடைய கஷ்டத்தை உண்மையாக உணர்ந்திருப்பதால் தான். தென்னிந்தியா சம்பந்தப்பட்டவரையில் பீடித் தொழில் என்று எடுத்துக்கொள்ளும்பொழுது அது ஒருவருக்கும் புரியாத தொழில். அதனால்தான் இந்த மசோதா விவாதிக்கக்கூடிய சமயத்தில் இங்கு பெஞ்சுகள் காலியாக இருக்கின்றன. இந்த ராஜ்யத்தில் கைத் தொழிலுக்கு அடுத்தப்படியாக ஒரு 6, 7 ஜில்லாக்களில் பரவலாக இந்தத் தொழில் அநேக குடும்பங்களுக்கு வாழ்வு அளித்துக்கொண்டு இருக்கிறது. முக்கியமாக, சென்னை நகரம், வட ஆற்காடு ஜில்லா, திருச்சி, சேலம் ஜில்லாக்கள், அதற்கு அடுத்தப்படியாக 2, 3 ஜில்லாக்கள் தாண்டி திருநெல்வேலி ஜில்லா, அம்பாசமுத்திரம் தாலூகாவிலுள்ள முக்கூடல் அதைச் சுற்றியுள்ள தென்காசி, நான்குனேரி தாலூகாக்களில் சிறிதும் பெரிதுமாக சுமார் 200 கிராமங்கள் ஆகிய இடங்களில் இந்தத் தொழில் பரவிக்கிடக்கிறது. இதில் 40,000 தொழிலாளர்கள் குடும்பஸ்தர்களாக ஈடுபட்டிருக்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் ஆண் தொழிலாளிகள் 1,000 பேர்களுக்குக் குறைவாக இருக்கும். முக்கியமாக, திருநெல்வேலி ஜில்லாவில், மேலப்பாளையம் என்ற நகரத்தில், பீடித் தொழில்தான் மத்தியதர வகுப்பினருக்கு வாழ்க்கை நடத்துவதற்கு முக்கியத் தொழில் ஆக இருக்கிறது. இருந்தாலும், இது மந்திரி சபைக்கு பூரா நிலமை தெரியக்கூடாத ஒரு தொழில். ஆனால் இப்பொழுது 12-46 p.m. அந்தத் தொழிலுக்கு அதிர்ஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இந்த மந்திரி சபை காலத்தில், அது ஏற்படுகிறது. நமது தொழில் மந்திரியுடன், எனக்கு கட்சி வேறுபாடு இருந்தாலும், தொழிலாளிகளின் நன்மையைக் கருதி இந்த மசோதாவை இவ்வளவு சீக்கிரம் கொண்டு வந்ததற்காக, கனம் ஆர். வெங்கட்டராமன் அவர்களைப் பாராட்ட வேண்டும் என்று எந்த மேடையில் இருந்தும் கூறத் தயங்க மாட்டேன். பல இடங்களில் தொழிலாளிகளுக்குக் கூலி ஒழுங்காகக் கிடைக்கிறது என்றாலும், எங்கள் பகுதிகளில், அப்படி இல்லை. 1,000 பீடிசுற்ற பத்தணாவுக்கு உள்ளாகத்தான் கொடுக்கிறோம். அதிலும், கமிஷன்கள் போக, பண்டலுக்கு இவ்வளவு என்று போக அந்தப் பத்தணாவில் அவர்களுக்கு, எட்டரை அல்லது எட்டேகால் அணாத்தான் கிடைக்கும். அந்த மாதிரி Poor wage-தான் கொடுக்கப்படுகிறது. அதோடு ஏற்கனவே உள்ள சம்பளத்தையும், ஒருசில முதலாளிகள், மூன்று, நான்கு மாதத்திற்கு ஒரு தரம்தான் கொடுக்கிறார்கள். அப்படியுள்ள முறையில் தொழிலாளிக்குக் கிடைத்தாலும், அது லாபகரமாக இல்லை.

சில தொழிலாளிகள், ஆண், பெண் உள்பட, என்னிடம் சொன்னார்கள், இந்த சட்டப்படி ஒரு குறிப்பிட்ட இடத்தில் பீடி சுற்றுவது அவர்களுக்கு மிகச் சிரமமாக இருக்கும் என்று. நான் அவர்களுக்கு எடுத்துச் சொன்

சென். இப்பொழுதுள்ள சட்டத்தின் கீழ், சலுகைகள் பரவலாக இருந்தாலும், உங்களுக்குக் கூலி உயர்வு கிடைக்காது. சீக்கிரமாக லைசென்ஸ் பெற்ற இடங்களில் வேலை செய்தால்தான், தொழில், சம்பள ஜவாப்தாரித்தனம் ஏற்படும், ஆகவே இந்தச் சட்டத்தின்கீழ் நீங்கள் எல்லோரும் வேலை செய்ய வேண்டும் என்று எடுத்துச் சொன்னேன். அதன் பிறகு, கிராமங்களில் தொழிலாளிகள் கொஞ்சம் திருப்தியாக இருக்கிறார்கள்.

சட்டம் நிறைவேற்றினால் மட்டும் போதாது. அதை நல்ல முறையில் அமலாக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடுகூட, ரூல்ஸ் ப்ரேம் பண்ணும் போது ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நாமோ ஒரு "ரிட்" யுகத்தில் வாழ்கிறோம். பீடி பாக்டரி முதலாளிகள் எங்கள் பகுதியில் உள்ளவர்கள், லீகல் டெம்பரமெண்ட் உடைய ஆட்கள். சுருக்கமாகச் சொன்னால், **Court birds** என்று கூடச் சொல்லலாம். நாங்களெல்லாம், **Court birds**-களாக இருந்தவர்கள்தான். பீடி இன்கம் மாக வைத்துக்கொண்டு, சண்டை பூசல்கள் போட்டு செலவழித்து இருக்கிறோம். நானே சுமார் ஒரு லட்ச ரூபாய் வரை ஒழித்து இருக்கிறேன். எங்கள் ஊர் ஆட்கள் சுப்ரீம் கோர்ட் வரை போய் சச்சரவு செய்வார்கள். மற்றப் பீடி முதலாளிகளைப்பற்றிச் சொல்லவில்லை. எங்கள் ஜில்லாவில் உள்ளதைப்பற்றிச் சொல்லுகிறேன். ஆகவே இந்த ரூல் விஷயங்களில் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீமான் கோதண்டராமன் பேசும்போது, எங்கள் ஜில்லாவில் உள்ள முதலாளிகளைப்பற்றி ரொம்பவும் குறைவாகப் பேசிவிட்டார்கள். அவர்கள் சொன்னதில், 75 சத விகிதம் உண்மையாக இருந்தாலும்கூட, அவர்கள் அப்படிக் குறைவாகப் பேசி இருக்கவேண்டாம்.

சட்ட விஷயத்தில், பல லட்சக் கணக்கான தொழிலாளிகள் நல் வாழ்வைக் கருதி, கனம் தொழில் அமைச்சர் அவர்கள் இதை அமலாக்கி, நல்ல முறையில் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri A. MARIAPPAN** : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைக் கொண்டுவந்த தொழில் அமைச்சர் அவர்களை ஒரு சில அங்கத்தினர்கள் தொழில் அமைச்சர் அவர்கள் தனிப்பட்ட முறையில் இந்த மசோதாவைக் கொண்டுவந்தது போல் பேசினார்கள். அவர்கள் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதை மறந்து பேசினார்கள். அவர்கள் ஏதோ தனிப்பட்ட முறையில் செய்ததில்லை இது. அந்த மெம்பர்களுக்கு ஒரு சங்கடம். கனம் வெங்கட்டராமன் அவர்கள், எந்தத் தொழில் சட்டத்தையும், தாங்கள் சொல்வதற்கு முன்பே, அவராகவே துரிதமாகக் கொண்டுவந்து, தங்களுக்கு வேலையில்லாமல் செய்துவிடுகிறார்களே என்ற பயத்தில், அவர் 4, 5 மாத காலத்தில் பதவியை விட்டு விடுவார்கள் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். தங்களுக்கு வேலையில்லாததால், வேலையில்லாமல் செய்துவிடுகிறதனால், அவர்கள் சீக்கிரமாக வேலையிலிருந்து விலகினால் நல்லது என்று எண்ணுவது தெரிகிறது. அவர்களுக்குச் சொல்லுகிறேன், கனம் தொழில் மந்திரி அவர்கள், காங்கிரஸ் கட்சியின் சார்பாக, இம்மாதிரிச் சட்டங்களை நிறைவேற்றி செயல்படுத்துகிறார்கள் என்று.

எங்கள் ஜில்லாவில் சில முதலாளிகள், தங்களிடம் வேலை செய்யும் பீடி சுற்றுகிறவர்களுக்கு, தங்கள் கண்டிராக்டர்கள் மூலமாக வேலை கொடுத்து வந்தார்கள். இன்றைய தினம், பீடி முதலாளிகள், இந்த மசோதா வரும் காரணத்தினால், அவர்களைப் பீடி சுற்றும் தொழிலாளிகள் என்ற நிலைமையில்லாமல் செய்ய முயற்சிக்கிறார்கள். அவர்கள் தாங்களாகவே பீடி சுற்றுவது போலவும், அவர்களிடம் இந்த முதலாளிகள் பீடிகளை விலைக்கு வாங்குவது போலவும், நிலைமையை ஏற்படுத்திக்கொண்டு இருக்கிறார்கள். இதற்கு நாம் சட்டத்திலே இடம் கொடுக்கக்கூடாது. எல்லா அரசியல் கட்சிகளும் கூடி இதற்கு ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

12th September 1958] [Sri A. Mariappan]

இந்த மசோதாவை செலக்ட் கமிட்டி பரிசீலித்து வந்த காலத்தில் கோயம்முத்தூர், சேலம் ஜில்லாக்களுக்கும் போக வேண்டும் என்று கேட்டுக்கொண்ட போது, இந்தச் சட்டம் செப்டம்பரில் சபைமுன் கொண்டு வரவேண்டும், இந்த ஜில்லாக்களுக்கெல்லாம் போய்க்கொண்டிருந்தால், தாமதமாகும் என்றும், உடனடியாக சட்டத்தை நிறைவேற்ற ஆர்வமாக இருந்தார்கள் அமைச்சர் அவர்கள்.

அப்படியிருந்தும்கூட சிலர் இந்தச் சட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவரவேண்டும் என்ற காரணத்திற்காக ஐந்தாம் தேதியிலிருந்து சேலத்தில் கலெக்டர் ஆபீஸ் முன்பாக மறியல் செய்து வருகிறார்கள். தாங்கள்தான் இந்தச் சட்டத்தை கொண்டுவந்துவிட்டோம் என்றும், அந்த கௌரவத்தைத் தாங்கள்தான் அடைய வேண்டும் என்றும் இப்படிச் செய்து வருகிறார்கள். இது தவறான வழி என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஏனென்றால் தொழிலாளர்களுக்கு நாம் நன்மை செய்யவேண்டும் என்று பாடு பட்டுக்கொண்டிருக்கும்போது அவர்கள் தங்களுடைய கட்சி உயர்வதற்கும் தங்கள் கட்சியில் தொழிலாளர்களை இழுத்துக்கொள்வதற்கும் முற்பட்டிருக்கிறார்கள். இதை வைத்துக்கொண்டு தொழிலாளர்கள் சார்பாகப் பேசுவது சரியல்ல. அப்படிப் பேசுகிறேன் என்று சொல்லிக்கொண்டு தொழிலாளர்களுக்குத் தீங்கு செய்து கொண்டு வருகிறார்கள். இப்படித் தீங்கு செய்ய முற்பட்டால் அது எங்கே கொண்டுபோய் விடும் என்பதை அந்தக் கட்சித் தலைவர்களும் தொழிலாளர்களும் நன்றாக உணர வேண்டும். அந்த வகையிலும் அதில் ஈடுபட்ட தொழிலாளர்கள் புரிந்துகொள்ள வேண்டும். எவ்வளவோ ஆவலுடன் இந்தச் சட்டத்தைச் கொண்டுவந்து நிறைவேற்ற வேண்டும் என்று சர்க்கார் நினைத்துச் கொண்டிருக்கிறார்கள். அதற்கு மாறாக சில கட்சிகள் வேலை செய்து கொண்டிருக்கிறது. அது சரியான காரியமல்ல என்பதைச் சொல்லிக்கொள்ளுகிறேன். 12-50 p.m.

இந்தச் சட்டம் வந்தால் திருநெல்வேலி ஜில்லாவில் பல இடங்களில் சிலர் பாதிக்கப்படுவார்கள் என்று நன்கு தெரிகிறது. எனக்கு முன்பு பேசிய கனம் ஆதிமூலம் அவர்கள் பேசும்போது இரண்டு அல்லது மூன்று அல்லது நான்கு மாதங்களாகக் கூட கூலியை விட்டு வருகிறார்கள் என்று சொன்னார். நான் சென்ற இடங்களில் சில பெண்மணிகள் சொன்னார்கள் நாலைந்து வருடங்களாகப் பீடி சுற்றிக்கொடுத்துவிட்டு தாங்களாகவே கூலி பெற்றுக்கொள்வதில்லை என்றும் சொன்னார்கள். அங்கேயெல்லாம் அநேகமாகப் பெண்கள்தான் பீடி சுற்றுகிறார்கள். மேலப்பாளையம் போன்ற இடங்களிலும் பெரும்பாலும் பெண்கள்தான் பீடி சுற்றுகிறார்கள். ஆகவே பெண்களுக்கு என்று சட்டத்தில் ஏதாவது வழி வகை செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாட்டையும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்ய முடியாவிட்டால் ஏற்கனவே சம்பாதித்தவர்கள் வருமானத்தைப் பூராவும் சேர்ந்து எல்லோரும் இழந்து விடக்கூடும். ஆதலால் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள பெண்களுக்கு இந்தச் சட்டத்தின் மூலமாகப் பாதுகாப்பு அளிக்க ஏதாவது வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நேரடியாக வேலை செய்தாலும் அல்லது கம்பெனி மூலமாக வேலை செய்தாலும் அந்தத் தொழிலாளர்களுக்கு எந்த விதமான பாதகமும் ஏற்படாத வகையில் சட்டம் செய்ய வேண்டுமோ அந்த வகையில் சட்டம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிப் பீடி சுற்றக் கூடிய தொழிலாளர்களுடைய நிலைமை பாதிக்காத அளவில் அவர்களுக்குச் சட்டம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால் சேலம் ஜில்லாவில்தான் ஆறு மாத காலமாக இதை அனுபவித்து வருகிறார்கள். அங்கே ஏற்கெனவே கோர்ட்டுக்குச் சென்று இரண்டணா குறைவாக வாங்கக்கூடிய நிலையில் அவர்கள் இருக்கின்றார்கள். இன்றைய தினம் அங்குள்ள முதலாளிகள் இரண்டணா குறைவாகக் கொடுக்கக் கூடிய நிலையில் இருக்கிறார்கள். நடுவில் ஏஜெண்ட் என்றோ அல்லது கண்ட்ராக்டர் என்றோ இருந்தால் அவர்களுடைய நிலைமை வேறுவிதமாக இருக்கிறது. அப்படி இருக்கக்கூடிய இடங்களில் பீடி சுற்றுகிறவர்களுடைய

நிலை சரியாக இல்லை. எந்த விதமான வசதியும் இல்லாமல் இருக்கிறார்கள். சர்க்கார் கொடுக்கக்கூடிய தீர்ப்புகளை அமுல் நடத்தாமல் அங்கங்கே ஏஜெண்டுகளையோ அல்லது கண்ட்ராக்டர்களையோ அமைத்து அவர்கள் மூலமாகக் கூலி கொடுத்து வருகிறார்கள். அவர்களை பொம்மைகளாக வைத்து முதலாளிகளே அவர்களிடமிருந்து வேலை வாங்கிக்கொண்டு ஏஜெண்டுகள் கண்ட்ராக்டர்கள் மூலமாகத் தாங்கள் பீடிகளை வாங்கி வருவதாகச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். இப்படிப்பட்ட நிலைமை ஏற்படாமல் இருக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். சில இடங்களில் நேரடியாக வேலை வாங்கி கூலி கொடுத்து வந்தும் ஏஜெண்ட்கள் மூலமாக வாங்குவதாகவும் சொல்லி வருகிறார்கள். இதைத் தடுக்க தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும். ஆகவே பீடி சுற்றுகிறவர்கள் நேரடியாக லாபம் கிடைக்கும் அளவில் அவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க சர்க்கார் முற்பட வேண்டும். இந்த அளவிலும் பீடி சுற்றுகிறவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்தச் சட்டத்தை சீக்கிரமாக கொண்டு வருவதற்குக் கனம் தொழில் மந்திரி அவர்கள் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்ததற்கு அவரைப் பாராட்டி இத்துடன் நான் முடித்துக்கொள்ளுகிறேன்.

*THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, பொதுவாக இந்த மசோதாவை வரவேற்றுப் பேசி ஆதரவு தந்த எல்லா அங்கத்தினர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். சென்னை ராஜ்யத்தில்தான் சிறு தொழில்களும் குடிசைத் தொழில்களும் அதிகமாக இருக்கின்றன. அவ்வாறு இருக்கிற சிறு குடிசைத் தொழில் எல்லாவற்றையும் நாம் சிறப்பாகச் சீரடையும்படி செய்தால்தான் நம்முடைய வாழ்க்கை நன்றாக இருக்குமேயல்லாமல் அதைக் கட்டுப்படுத்தாமல், ஒழுங்குப்படுத்தாமல் அப்படியே விட்டு விட்டால் மக்களுடைய வாழ்க்கை மிகவும் கேவலமாகப் போய்விடும். இதையொட்டித்தான் லட்சத்திற்கு மேலாக இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பீடித் தொழிலாளர்களுக்கு உடனடியாக சட்டப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் இதைக் கொண்டுவந்திருக்கிறோம்.

இந்தச் சட்டமானது சென்னை ராஜ்யத்தில்தான் முதல் முதலாகக் கொண்டு வரப்படுகிறது. மத்திய அரசாங்கத்தில் இந்த விதமான ஒரு சட்டம் கொண்டு வரவேண்டும் என்று எடுத்துக்கொண்ட முயற்சி பயன் அளிக்காமல் போய் விட்டது. ராஜ்யங்களில் ஏதாவது இந்த விதமான சட்டத்தைச் செய்து அவர்களுடைய அனுபவத்தையொட்டி ஏற்பாடு செய்து கொள்ளலாம் என்று சொல்லி விட்டார்கள். நமக்கு இது ஒரு முக்கியமான பிரச்னையாக இருப்பதால் தான் இதை நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோம். இந்தச் சட்டம் வந்த பிறகு இந்தத் தொழில் நன்றாக நடக்குமா, அதனால் விலைகள் உயர்ந்து நம்முடைய தொழில் நசித்துப்போகுமா, அல்லது பக்கத்தில் இருக்கும் ராஜ்யங்களில் இப்படிப் பட்ட சட்டம் இல்லாத காரணத்தால் சென்னை ராஜ்யத்திலுள்ள தொழில் பிற ராஜ்யங்களுக்குப் போய்விடுமா பக்கத்திலுள்ள கேரள, மைசூர் முதலிய ராஜ்யங்களுக்குச்சென்று விடுமோ என்றெல்லாம் மிக முக்கியமான பிரச்னையாக இருக்கிறது. அதனால் நாம் இதை நன்றாக ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரவேண்டும்.

இப்பொழுது நாம் கொண்டுவந்திருக்கிற சட்டத்தில் முதல் முதலாக சில முக்கியமான ஷரத்துக்களைச் சேர்த்து இருக்கிறோம். சில அதிகாரங்களைக் கொடுக்கக்கூடிய ஷரத்துக்களையும் சேர்த்திருக்கிறோம். ஒன்று கட்டடம் கட்ட வேண்டும், சுகாதார வசதியாக, காற்றோட்டமுள்ளதாக இருக்க வேண்டும், இன்னும் வெளிச்சம் உள்ளதாக இருக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லியிருக்கிறோம். அவைகள் எல்லாம் செய்வதற்கு முதலாளிகளுக்குக் கொஞ்சம் செலவு அதிகமாகும் என்பதில்

12th September 1958] [Sri R. Venkataraman]

சந்தேகமில்லை. இந்தச் சட்டம் வந்தவுடனேயே இவைகளையெல்லாம் செய்துவிடப்போவதில்லை. அதற்காகத்தான் முதலாவது ஷரத்தில் சர்க்கார் ஓரளவு எந்தந்த ஷரத்துக்களை எந்தந்த காலத்தில் எந்தந்த பகுதியில் கொண்டுவரவேண்டும் என்று நிர்ணயிக்க வேண்டிய பொறுப்பை, அவர்களுக்கு அந்த அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறேம். கனம் சின்னதுரை அவர்கள் சொன்னதுபோல் உடனடியாக இந்தச் சட்டத்தை அமுல் நடத்தினுல், அதாவது இந்தச் சட்டம் ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வரும் என்று வைத்துக்கொண்டால் இரண்டாம் தேதி முதற்கொண்டு பல பீடி தொழில்சாலைகள் மூடப்படும் படியான நிலை ஏற்படும். எந்த இடங்களில் பீடி சுற்றுகிருர்களோ அந்த இடங்களில் ஷரத்துக்களின்படி எந்த விதமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறேம், என்னென்ன நிபந்தனைகள் இருக்க வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறேம். அப்படி ஒன்றும் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியாது என்பதற்காகத்தான் அவர்களுக்கு அவகாசம் கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்த அளவுக்கு அவர்களுக்கு அவகாசம் வேண்டுமோ அந்த அளவுக்கு அவர்களுக்கு அவகாசம் கொடுக்கும்படியான ஷரத்து சேர்க்கப் பட்டிருக்கிறது. ஏற்கெனவே செலெக்ட் கமிட்டியில் இதைப்பற்றிப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டபோது இதைப்பற்றி சொல்லியிருக்கிறேன். இந்தச் சட்டம் நிறைவேற்றியவுடனேயே இவைகளையெல்லாம் செய்ய வேண்டும் என்ருல் அது முடியாது, அந்த அளவுக்கு அது சாத்தியமாக இருக்காது, எல்லாவற்றையும் உடனடியாக அமுல் நடத்த வேண்டுமானுல் அவர்களிடம் பணம் இருக்காது, அதிகப்படியான பணம் செலவு செய்ய வேண்டியதாக இருக்கும் என்பதை அனுசரித்துத் தான் நாளாடைவில் அவைகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கிறேம். அந்த முறையில்தான் ஷரத்துக்களுக்கு திருத்தம் செய்து அமைக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஷரத்துக்களை நாம் திருத்தியமைக்கும்போது, ஏதோ இந்த நாட்டை விட்டுத் தொழில் வேறு ராஜ்யங்களுக்குப் போய்விடுமா என்று ஆலோசனை செய்யப்பட்டது. நாம் உடனடியாக எல்லா ஷரத்துக்களையும் அமுல் நடத்தினுல், ஒருவேளை அவர்கள் தங்களுடைய வியாபாரத்தையோ அல்லது உற்பத்தியையோ வேறு இடத்திற்கு மாற்றலாம். ஆனுல், கொஞ்சங் கொஞ்சமாக, செய்கின்றபோது, ஏதோ, ஒரு ஷரத்து இப் பொழுது அமுலுக்குக் கொண்டுவந்திருக்கிருர்கள், இதற்காக அடுத்த மாகாணத்திற்குச் செல்ல வேண்டியது இல்லை என்று நினைப்பார்கள். இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு, மற்ெருரு ஷரத்தை அமுலுக்கு கொண்டுவந்தால், அப்பொழுதும் இதற்காகச் செல்ல வேண்டியதில்லை என்று நினைப்பார்கள். அவ்வாறு படிப்படியாக இந்த ஷரத்துக்கள் எல்லாவற்றையும் நாம் நிறைவேற்ற முடியும். அப்படிச் செய்வது தான் சரியான முறையும் கூட. 1-00 p.m.

நண்பர் ஸ்ரீ சின்னதுரை அவர்கள் சொல்கிருர்கள், குதிரைப் பந்தய மசோதா மாதிரி போய்விடக் கூடாது என்று. குதிரைப் பந்தயத்தினுல் பணம் இன்னும் வந்துகொண்டிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத் திற்கு நமக்குப் பணம் மிகத் தேவையாக இருப்பதால், ஏதோ அதை வைத்தாவது நான்கு சிறு கைத்தொழில்கள் ஆரம்பிக்கலாமே என்ற எண்ணத்துடன் அதை ஒத்திப் போட்டுக் கொண்டு வருகிறேம். ஆனுல், அந்தவிதமான நிலை இந்த மசோதாவுக்கு ஏற்படாது.

வேலை நேரம், ஓவர்டைம் கொடுப்பது போன்ற ஷரத்துக்களை நாம் உடனடியாக அமுல் நடத்தலாம். அதனுல் எந்த முதலாளிகளுக்கும் அதிகச் செலவு ஏற்படாது. கட்டிட வசதிகள், சுகாதார வசதிகள் செய்வதில் தான் நாம் அவர்களுக்கு விதிகளைத் தளர்த்திக் கொடுப்பதாக யோசனை செய்திருக்கிறேம். அதனுல் அவர்கள் உடனடியாகப் பாதிக்கப் படமாட்டார்கள்.

[Sri R. Venkataraman] [12th September 1958

மற்றும் ஒரு கொள்கைபூர்வமான விஷயம். சாதாரணமாகத் தொழிலாளர்களுக்கு வசதிகளை அதிகரித்தால் உடனே உற்பத்தியினுடைய விலை அதிகரித்துவிடும் என்று நினைப்பது பொருளாதாரச் சரித்திரப்படி உண்மை அல்ல. அப்படி அது உண்மையாக இருக்குமானால், இங்கிலாந்து தேசத்தில் எந்தத் தொழிலுமே இன்றைக்கு இருக்க முடியாது. பதினெட்டு 19-வது நூற்றாண்டில் அங்கிருந்த கூலி நிலைமையையும், அதற்குப் பின்பு இப்பொழுது 20-வது நூற்றாண்டில் இருக்கும் கூலி நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்த்தால், கூலி உயர்வதன் மூலமாகத் தொழில் நசித்துவிடும் என்று சொல்கிற வாதத்துக்குக் கொஞ்சங்கூட இடம் இருக்க முடியாது. அதுபோல்தான் நம்முடைய ராஜ்யத்தில் கூட, பஞ்சாலைகளை எடுத்துக் கொண்டால், 1918, 1919, 1920-ம் வருஷங்களில் இருந்த நிலைமையையும் இன்றைக்கு இருக்கும் நிலைமையையும் பார்த்தால், கூலி உயர்வு எவ்வளவோ மடங்கு அதிகரித்திருக்கிறது, அதனால் தொழில் பாதிக்கப்படவில்லை என்பது நன்றாகப் புலனாகும்.

கூலி முதலிய வசதிகள் அதிகரிப்பது மூலமாகத் தொழில் கூட மேம்பாடு அடைகிறது. முதலாளிகள் சிக்கன முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியமும் ஏற்படுகிறது. தொழிலையும் நன்றாக, திறமையாகச் செய்ய வேண்டிய ஊக்கம் ஏற்படுகிறது. ஆகவே தான் தொழிலாளர்களுக்குச் சற்று சலுகை அதிகரிப்பதன் மூலமாகத் தொழில் நசித்துவிடும் என்ற கொள்கையை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை. சாதாரணமாகப் பார்க்கும் போது, இந்தத் தொழில் நுட்பமும், தொழிலில் இருக்கும் திறமையும் தொழிலும் சிக்கனமாக நடைபெறவேண்டுமானால், இவை யெல்லாம் அதற்குத் தூண்டுகோலாக இருக்கின்றன.

அடுத்தபடியாக, மிக முக்கியமான பிரச்னை. பெண்களுக்கு எந்த அளவு விதி விலக்கு அளிக்கவேண்டும் என்பது. இங்கு வைத்திருக்கும் சட்டத்திலே பெண்கள் வீட்டிலே இலை வெட்டுவது, இலை நனைப்பது என்ற இரண்டு வேலைகளை மாத்திரம் தான் செய்யலாம் என்று நாம் சொல்லியிருக்கிறோம். இதற்கு மேலாக அவர்கள் வீட்டிலேயே பீடி சுற்றி விடலாம் என்று சொல்லிவிட்டால், இந்தச் சட்டம் வெறும் காகிதமாகப் போய்விடும். காரணம் என்ன வென்றால், பெண்களுக்கு எடுத்துக் கொண்டு போகிறோம் என்று வீட்டுக்குக் எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள். அங்கு ஆண்கள் எல்லோரும் வேலை செய்வார்கள். இதை நாம் வீடு வீடாகப் போய் " இன்ஸ்பெக்ஷன் " செய்வதுமுடியாது. லைசன்ஸ் ப்ரெமிஸ்ஸுக்குப் போய் இன்ஸ்பெக்ஷன் செய்வதே மிகக் கஷ்டமான காரியம். அப்படியிருக்கும்போது, வீட்டிலே கொண்டுபோய்ச் சுற்றலாம் என்றால், இந்தச் சட்டமே உடைந்துவிடும். அந்தக் கஷ்டத்திற்காக வீட்டுக்குப் போய் பீடி சுற்றக்கூடாது என்ற நிலைமையை வைத்திருக்கிறோம். பெண்கள் வீடுகளில் இலைகளை வெட்டி, நனைத்துக் கொடுக்கும் தொழிலைச் செய்தால், லைசன்ஸ்ட் ப்ரெமிஸஸ்ஸுலே வைத்துக்கொண்டு சுற்றுவது நல்ல முறையாக இருக்கும்.

இரண்டாவது, சுகாதாரத்தை அபிவிருத்தி செய்யவேண்டும் என்பது. வீட்டிலேயே பீடி செய்யலாம் என்று சொல்லிவிட்டால், எந்த முறையிலும் சுகாதாரம் அபிவிருத்தி அடையாது. இன்னும் கேவலமாக, பலவித நோய்களுக்கு உள்ளாகும்படி ஏற்படும். ஆகவே தான், சில பகுதிகளில், திருநெல்வேலிப் பகுதியிலே பெண்களுக்கு இதில் ஓரளவு கஷ்டம் ஏற்படும் என்றாலும், அவர்கள் தங்களுடைய வேலையை இரண்டாகப் பிரித்துக் கொண்டால் சரியாகப் போய்விடும். கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆதிமூலம் போன்றவர்கள் இதற்கு வழிகாட்டியாக இந்த வேலையைச் செய்து காட்டினால் மற்றவர்கள் பின்பற்றுவதற்குச் சகாயமாகவும் உதவியாகவும் இருக்கும். எப்படியென்றால், அவர்கள் இலை வெட்டுவது, நனைப்பது போன்ற வேலைகளை பெண்களுக்குத்தான் கொடுப்பது என்று தீர்மானம் செய்துவிட்டால், அந்த வேலையைப் பெண்கள் செய்து கொடுத்து விடுவார்கள். அதை வைத்துக்கொண்டு லைசன்ஸ்ட் ப்ரெமிஸஸ்ஸிலே பீடி

12th September 1958] [Sri R. Venkataraman]

சுற்றுவது போன்ற வேலையைச் செய்யலாம். அவ்வாறு அந்த முறையை எல்லோரும் கடைப்பிடிப்பார்களானுல், இதில் இருக்கும் சிக்கலும், இதில் இருக்கும் கஷ்டமான பிரச்னையும் தீர்ந்துவிடும்.

இந்த முறையில் வற்புறுத்துகின்றபோது, இதில் முதலாளிகளும் ஒத்துழைக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். சட்டத்தை எந்த முறையில் நாம் ஏமாற்றிவிடலாம் என்றே எப்போதும் பார்த்துக் கொண்டிருப்பதால் தான், கடுமையான சட்டங்கள் மேலும்மேலும் வர வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. தொழிலாளர்-முதலாளி உறவு சரி யாக இல்லை என்று அடிக்கடி ஹைகோர்ட்டுக்குச் சென்று தீர்ப்பு பெற்ற தால்தான், சென்னை ராஜ்ய சர்க்கார் பீடித் தொழிலாளர்பற்றிய சட்டத் தைக் கொண்டுவரவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சட்டத்தை ஏமாற்ற வேண்டும், சட்டத்தைச் சட்டபூர்வமாக மீறவேண்டும் என்ற கொள்கையை விட்டு, சட்டத்தின் தத்துவத்தை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கவேண்டும், சட்ட தத்துவத்தின்படி ஒத்துழைக்கவேண்டுமென்று வருவார்களானுல், இதில் இருக்கும் குறைபாடுகளைத் திருத்துவதற்குச் சர்க்கார் எப்போதும் தயாராக இருக்கும். விசேஷ சலுகை வேண்டுமானுலும் அதைக் கொடுப் பதற்கும் சர்க்கார் தயாராக இருக்கும். அதற்கு மாருக, சட்டத்தை மீறவேண்டும், உடைத்துவிடவேண்டும் என்ற நோக்கத்துடன் முயற்சிகளை செய்தால், இதற்குமேலும் இன்னும் இருக்கக்கூடிய கடினமான ஷரத்துக் களைச் சேர்த்து நாம் மக்களுக்காக இந்தச் சபை முன் கொண்டுவரவேண்டிய அவசியம் ஏற்படும் என்பதை நான் மிகத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

அடுத்தபடியாக, மிகக் கஷ்டமான பிரச்னை என்னவென்ருல், யார் இந்தப் பீடித் தொழிலிலே " முதலாளிகள் " என்று நிர்ணயிப்பது. முதல் ஒருவர் போட்டு, அவர் பிராஞ்ச் மானேஜர்களை வைத்து, பிராஞ்ச் மானேஜர்களிடத்தில் பீடித் தொழிலாளர்கள் புகையிலை முதலியவற்றை வாங்கிக் கொண்டு சென்று பீடி சுற்றும் பழக்கம் இருப்பதால், யார் முதல் போட்டு இந்தத் தொழிலை நடத்துகிருர்களோ அவர்கள், " எங்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே தொழில் உறவு இல்லை " என்ற வாதத்தை எழுப்பிக்கொண்டிருக்கிருர்கள். அதை நாம் ஓரளவு சமாளிப் பதற்காகத்தான் புதிய திருத்தம் கொடுத்திருக்கிறேம். யாருக்கு இந்தத் தொழிலை நடத்துவதில் இறுதியான பொறுப்பு இருக்கிறதோ அவரும், இன்னும் அதுசம்பந்தமான ஒரு ட்ரேட் மார்க் என்று வைத்துக்கொண்டு இருப்பவரும், இன்னும் ப்ராஞ்ச் மானேஜர்கள் என்றே, ஏஜெனட் என்றே பெயரைக் கொடுத்தாலும், யார் மூலமாகத் தொழிலைச் செய்கின்றுர்களோ அவர்களும், ஆக இவர்கள் எல்லோரும் சேர்ந்து " முதலாளிகள் " என்று பொருள்படும்படியாகத் திருத்தம் கொண்டுவந்திருக்கிறேம்.

இது மாத்திரமல்ல. லைசன்ஸ் கொடுக்கும்போதுகூட, யாராவது ஒருவர் " பினுமி " யாக, வேறு ஒருவருக்காக, லைசன்ஸ் வேண்டுமென்று கேட்டால், லைசன்ஸ் கொடுக்கும் அதிகாரி, அப்படிக் கேட்பவர், தானே தொழில் செய்யவேண்டுமென்று நினைக்கின்ருரா, அல்லது வேறு யாருக் காகவாவது பெயர் கொடுக்கிருரா என்று கண்டுபிடித்து, அப்படிப்பட்ட வருக்கு லைசன்ஸ் கொடுக்காமல் இருப்பதற்கு அதிகாரம் வழங்க ஒரு திருத்தம் கொண்டுவந்திருக்கிறேம்.

லைசன்ஸ் கொடுக்கும்போது, இவர் ஏதாவது ஓரளவுக்கேனும் சக்தி உள்ளவர் தானு, தொழிலாளர்களுக்கு எல்லாவிதமான ஷரத்துக்கள் படியும் செய்யவேண்டிய வேலைகளைச் செய்யக்கூடிய சக்தி இருக்கிறதா, அதற்கு வேண்டிய பொருள் இருக்கிறதா என்பதைப் பார்த்து, சக்தியும் பொருளும் இல்லாதவர்களுக்கு லைசன்ஸ் வழங்கப்படமாட்டாது என்ற நிலைமையையும் இதில் ஏற்படுத்த முன்வந்திருக்கிறேம்.

அதற்குமேல், லைசன்ஸ் கொடுக்கும்போது, தாங்களாகவே விற்கப் போகிருர்களா, ட்ரேட் மார்க் கொடுத்து விற்கப் போகிருர்களா, அல்லது வேறு யாருக்காகவாவது வேலை செய்யப் போகிருர்களா என்பதைத் திட்டவட்டமாகக் கூறவேண்டும் என்ற ஷரத்தையும் சேர்த்திருக்கிறேம்.

[Sri R. Venkataraman] [12th September 1958

மனித யத்தனத்தில் எப்படி எப்படியெல்லாம் இந்தத் தொழிலாளர்களைக் காப்பாற்ற முடியுமோ அதைச் செய்தாய்விட்டது. இதற்குமேலும், யாராவது மீறி விடுவார்கள் என்று பயந்தால் அதற்கு நம்முடைய பிரயத்தனம் அதற்குமேல் என்ன இருக்கிறதோ அதைச் செய்து பார்க்க வேண்டும். இப்பொழுது நாம் கொண்டுவந்திருக்கும் நிலைமையிலே அவ்விதமான தவறுதல்களுக்கோ பயத்திற்கோ கொஞ்சங்கூட இடமில்லை என்பதைத்தான் நான் மிகப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, கூலியைப்பற்றிப் பல நண்பர்கள் பேசினார்கள். கூலி விஷயத்திலே நாம் ஒரு கமிட்டி போட்டிருப்பது நன்றாகத் தெரியும். குறைந்தபட்சக் கூலிக் கமிட்டியானது பல இடங்களுக்குச் சென்று, ஆங்காங்கே இருக்கும் நிலைமைகள் எல்லாவற்றையும் பார்த்து, அவர்கள் என்ன
1-10 p.m. சிபார்சுகள் செய்கிறார்களோ, அவைகளையொட்டி சர்க்கார் ஒரு முடிவு எடுக்கும். அந்த முடிவை அவர்கள் பிரசுரம் செய்துவிட்டால், அது சட்ட பூர்வமாக அமுல் நடத்தப்படும். அதற்குப் பிறகு எந்தவிதமான சட்டமும் அவசியம் இல்லை. இதை எவ்வளவு சீக்கிரமாகச் செய்ய வேண்டுமென்று விரும்பினாலும், ஓரளவு எல்லோரையும் கலந்து செய்தால்தான், அது நல்ல முறையாக இருக்கும். அவசரப்பட்டு சர்க்காரே "நோட்டிபை" செய்துவிடலாம். கமிட்டி கூடப் போட்டிருக்கத் தேவையில்லை. 'மினிமம் வேஜஸ் ஆக்ட்' பிரகாரம் சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது. குறைந்தபட்சக் கூலி இவ்வளவுதான் இருக்கிறது என்று நோட்டிபிகேஷன் போட்டு, அதற்கு ஏதாவது "அப்ஜக்ஷன்" இருக்கிறதா என்று மக்களிடம் கேட்டு முடிவு செய்யலாம். ஆனால், கமிட்டி போடுவதன் முக்கிய நோக்கம், முதலாளிகளின் பிரதிநிதிகளும், தொழிலாளர்களின் பிரதிநிதிகளும் சேர்ந்து அந்தக் கமிட்டியில் இருந்து, அவரவர்களுக்கு இருக்கும் கஷ்டங்கள் எல்லாவற்றையும் தங்களுக்குள் பேசி, ஒரு நியாயமான முடிவுக்கு அவர்களே வந்துவிட்டால், பின்னால் இதை அமுல் நடத்துவதில் இருக்கும் கஷ்ட நஷ்டங்கள் தவிர்க்கப்படும். இம்முறைக்குள்ள முறையில் எல்லாம் சுலபமாகப் போய்விடும் என்பதற்காகத்தான் இந்தக் கமிட்டி போட்டிருக்கிறோம். அந்தக் கமிட்டி நல்ல முறையில் வேலை செய்து தொழிலாளர்களுக்கு நன்மை செய்யும் என்பதில் சந்தேகம் இல்லை. ஓவர் டைம் போன்ற விஷயங்கள் எல்லாவற்றையும் இந்தச் சட்டத்திலேயே போட்டிருக்கிறோம். இப்போது இரண்டு மடங்கு கொடுக்க வேண்டுமென்று போட்டிருக்கிறோம். ஸ்ரீ மருதாசலம் அவர்கள் பேசும் போது $1\frac{1}{2}$ மடங்கு கொடுத்தால் போதும் என்று சொன்னார்கள். நான் கொடுத்திருப்பது இரண்டு மடங்கு என்பதைக் கவனிக்கவேண்டும்.

சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கலாம் என்கிற தனிச் சலுகையை சர்க்கார் ஏன் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று சிலர் கேட்டார்கள். நான் அவர்களுக்குத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்வது என்னவென்றால் ஒரு சட்டத்தைச் செய்துவிட்டு அதில் ஏதாவது கஷ்டம் ஏற்பட்டாலோ, நிர்ப்பந்தம் ஏற்பட்டாலோ அல்லது திடீரென்று மாறுதல் செய்ய வேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டாலோ நாங்கள் செய்த சட்டமே எங்கள் கைகளைக் கட்டக்கூடியதாக இருக்கக் கூடாது. "சட்டம் இடம் கொடுக்கவில்லை. நாங்கள் என்ன செய்வது ?" என்று அந்தச் சங்கடமான நிலைமையில் சட்டசபையைத் தேடி வரும்படியாக இருக்கக் கூடாது. அப்புறம் மக்களுக்கு எந்தவிதமான நன்மையையும் செய்ய முடியாது. ரெஸிட்யுவரி பவர் என்று கடைசியாக ஒதுக்கப்பட்ட அதிகாரம் எல்லாவற்றுக்கும் உண்டு. ஆனால் இதைச் சர்க்கார் துஷ்பிரயோகம் செய்கிறது என்றால் சர்க்காரைக் கேட்பதற்கும், சட்டசபையில் கேள்விகள் கேட்பதற்கும் முடியும். எப்படித் திடீரென்று கஷ்டமான நிலைமை ஏற்படலாம் என்று கேட்கலாம். தஞ்சாவூரில் புயல் அடித்தது. அந்தமாதிரி திருநெல்வேலி ஜில்லாவில் அடித்துப் பத்துப் பன்னிரண்டு தொழிற்சாலைக் கட்டிடங்கள் பாதிக்கப்படுவது என்று வைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் 150 சதுர அடியில் கட்டிடம் கட்டுகிற வரைக்கும் தொழில் நடத்தக் கூடாது என்று சட்டத்தை உபயோகித்தால் இதனால் நான்கைந்து மாதம் தொழிலாளர்கள் தாம் பாதிக்கப்படுவார்கள். பிழைப்பு இல்லாமல் போய்விடும்.

12th September 1958] [Sri R. Venkataraman]

இப்படி எதிர்பாராத நிலைமைகள் ஏற்படுவதைச் சமாளிப்பதற்காகத்தான் ஒவ்வொரு சட்டத்தில் இந்த ஒரு ஷரத்தைப் போட்டுக் கொண்டிருக்கிறோம். ஆனால் அதிகமாக இதை உபயோகப்படுத்துவதேயில்லை. எதிர்பாராத நிலைமை ஏற்படுவது குறைவாக இருக்கிற காரணத்தினால் தான் அவை உபயோகப்படுவதில்லை. ஆகவே இந்த ஷரத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பொதுவாக இந்த மசோதாவுக்கு எல்லோரும் கொடுத்திருக்கும் ஆதரவுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொண்டு இந்த மசோதாவை ஆதரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI: **On a point of clarification, Sir,** டிரேட் மார்க் போட்டுக்கொண்டுள்ள கம்பெனிகளுக்குப் பல பிராஞ்சு ஆபீஸ்கள் இருக்கின்றன. பிராஞ்சு ஆபீஸ்களுக்கு மானேஜர்கள் தனியாக இருக்கிறார்கள். அவர்கள் இதை அமுலுக்குக் கொண்டு வர மறுத்தால் என்ன செய்வது ?

THE HON. SRI R. VENKATARAMAN: நான் கொடுத்திருக்கிற திருத்தத்தில் The term 'employer' will include a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940) in relation to beedi. இவர்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று தான் இருக்கிறது.

DEPUTY SPEAKER: The question is—

'That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958 (L.A. Bill No. 18 of 1958), as amended by the Joint Select Committee, be taken into consideration.'

The motion was put and carried.

DEPUTY SPEAKER: The clause by clause consideration of the Bill will be taken up tomorrow.

The House will now adjourn and meet again at 9 a.m. tomorrow.

The House then adjourned.

## VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules, Orders and Notifications.

119. *Notification issued with G.O. Ms. No. 2340, Public (Services-A), dated 22nd August 1958, amending the Madras Public Service Commission Regulations so as to exclude the post of the Superintendent, Government Estate, from the Commission's purview.* [Laid on the table of the House under Article 320 (5) of the Constitution of India.]

120. *Notification issued with G.O. Ms. No. 1841, Home, dated the 1st July 1958, issuing licence in the form specified in the annexure for possession and issue of liquor by Manager, Canteen Stores Department (India), Canteen Retail and Bulk Issue Depot, Fort St. George, Madras, to Military Contractors or Officers of Canteen Stores Department (India).* [Laid on the table of the House under section 54 (3) of the Madras Prohibition Act, 1937 (Madras Act X of 1937).]